“உடைந்த கண்ணாடி ஜன்னல்களையெல்லாம் மாற்றியாகி விட்டதா?”

–கேட்டவர் மணிரத்னம். குண்டு வெடிப்பில் சிக்கி, மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு, தெய்வாதீனமாகத் தப்பியபின் அவர் கேட்ட முதல் கேள்வி இது!

குறிப்பறிந்து, அன்று மாலையே விபத்து சுவடு துளியும் இன்றி மணிரத்தினத்தின் வீடு சீரமைக்கப்பட்டு விட்டதும், போலீஸ் தொடர்ந்து புலன் விசாரிப்பதும், மக்கள் மெல்ல அதிர்ச்சியிலிருந்து மீண்டதும் ஒரு புறம் இருக்க, உண்மையிலேயே மிரண்டு போயிருப்பவர்கள் திரைக் கலைஞர்கள்தாம்!


• கே. பாலசந்தர்

சமூக அக்கறையுள்ள படங்கள்– இது போன்ற சம்பவங்களால்– வருவது இனி தடைப்பட்டு விடுமா? ஒவ்வொரு கலைஞனுக்கும் போலீஸ் பாதுகாப்புதான் போட முடியுமா?

என்ன நினைக்கிறார்கள் திரையுலகப் பெரும் புள்ளிகள்? நான்கு பேரிடமாவது கருத்து கேட்பது காலத்தின் கட்டாயமாகப்பட்டதால் கேட்டோம்:

# வன்முறைக்கு பயந்து விடுவார்களா?

சமூகப் பிரக்ஞையுடன், ஒரு பிரச்னையை முன்வைத்து, அல்லது தீர்வு தேடி படம் எடுப்பவர்களுக்கெல்லாம் இது தான் கதியா? அத்தி பூப்பது போல் எப்போதேனுமாவது வந்து கொண்டிருக்கும்


• மணிரத்னம்

**டைரக்டர் கே. பாலசந்தர்:**

இந்தச் சம்பவம் பற்றிக் கேள்விப் பட்டவுடன் அதிர்ச்சி அடைந்த என் மனைவி உடனே என்னிடம் இப்படிச் சொன்னாள்: “இனிமே ரிஸ்க்கான படம் எதுவும் எடுக்காதீங்க. எதற்கு வீண் வம்பு!”

வன்முறையாளர்கள் இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபடுவதன் நோக்கமே இம்மாதிரியான ரியாக்ஷன்களை உருவாக்கத்தான். சினிமா கதையாக எதை வேண்டுமானாலும் சொல்லலாம். மக்களும் பார்க்கிறார்கள். ஆனால் சமூகப் பொறுப்புடன் ஒரு சர்ச்சைக்குரிய விஷயத்தை ஒரு

• ஜி.வி.

இயக்குநர் கையாள்கிறார் என்றால் அதற்கு அபார துணிச்சல் வேண்டும். தவிர, சமூகத்தின்பால் ஒரு பரிவும் நல்லெண்ணமும் கூட வேண்டும்.

அப்படிச்செய்தால் உயிருக்கு ஆபத்து என்ற சூழ்நிலை வருமானால் ஒரு தயக்கம் ஏற்படுவது இயல்புதானே?

வன்முறைச் செயல்கள், துணிச்சலாகப் படம் எடுக்க நினைப்பவர்களுக்கு அச்சுறுத்தல் தான்! கருத்துச் சுதந்திரத்துக்குப் பெரும் பாதிப்பு தான்!

**டைரக்டர் மகேந்திரன்:**

இந்த வன்முறைச் செயலை கடுமையாகக் கண்டிக்கும் போதே, மணிரத்னத்தை ஆபத்திலிருந்து காப்பாற்றிய இறைவனுக்கு நன்றி சொல்கிறேன். மணி போன்ற இயக்குநர்கள் நிச்சயம் இம்மாதிரி சலசலப்புகளுக்கு அஞ்சமாட்டார்கள்; அஞ்சக் கூடாது என்பது என் திடமான கருத்து.

ஆனால், வர்த்தக ரீதியில், ஜாதி–மத விஷயங்களை சினிமாவில் பயன்படுத்திக் கொள்ள நினைக்கும் 'போலி'களுக்கு இந்த வன்முறை நிச்சயம் ஒரு பயத்தைத் தரும்.

முன்னைவிடத் தீவிரமாய், ஆழமாய் பிரச்னைகளை அலசியாக வேண்டிய கட்டாயத்தில் இப்போது இருக்கிறோம்.

சமூகப் பிரச்னைகளைச் சொல்வதுடன் கூட, அதனால் எப்படிப்பட்ட விளைவுகளை எதிர் நோக்க நேரிடுகிறது என்பது பற்றிய விழிப்புணர்வையும் மக்கள் மத்தியில் ஏற்படுத்தியாக வேண்டும் என்பதைத் தான் மணிரத்னம் மீதான தாக்குதல் எடுத்துக் காட்டுகிறது.

**டைரக்டர் ஷங்கர்:**

தம் படங்கள் மூலம் நாடு முழுவதும் தம்மை நோக்கிய ஒரு கவன ஈர்ப்பைக் கொண்டு வந்தவர் மணிரத்னம். அவர் மீது தாக்குதல் என்று அறிய அதிர்ச்சியாக இருக்கிறது. தாக்குதலுக்கான 'மோட்டிவ்' என்ன, குற்றவாளி யார் என்பதெல்லாம் விசாரணையில் உள்ளபோது, அனுமானத்தில் கருத்து சொல்வது சரியில்லை. ஆனாலும் 'பம்பாய்' படத்துக்காகத்தான் இத்தாக்குதல் என்றால் அது நிச்சயம் இயக்குநர்களின் கருத்துச் சுதந்திரத்துக்கு அச்சுறுத்தல்தான்.

சர்ச்சைக்குள்ளாகக் கூடிய 'சப்ஜெக்ட்'களை எடுக்க நினைப்பவர்கள்– ஒரு சிலராவது – எதற்கு வம்பு என்று நினைக்கக் கூடும். ஆனால், 'பம்பாய்' படத்துக்கும் இத்தாக்குதலுக்கும் சம்பந்தமில்லை என்று தெரியவருமானால் அத்தயக்கத்துக்கு இடமில்லை.


• ஷங்கர்


• மகேந்திரன்

**ஜி. வெங்கடேஸ்வரன்:**

'பம்பாய்' தான் இத்தாக்குதலுக்குக் காரணம் எனில், வெல்! அது போன்ற 'சென்ஸிடிவ்' சப்ஜெக்டை எடுக்கிற துணிச்சல் யாருக்கும் வராது என்று உறுதியாகச் சொல்வேன். மணிரத்னம் போன்ற ஒரு சிலருக்கே சாத்தியம். அவர்கள், எத்தகைய எதிர்ப்பு வந்தாலும் காம்ப்ரமைஸ் செய்து கொள்ள மாட்டார்கள். பயப்படவும் மாட்டார்கள். மணிரத்னம் விஷயத்தில் இதை நான் உறுதியாகச் சொல்லுவேன்!

தொகுப்பு: **மௌஷ்மி.**

அதிக பக்கங்கள்!

# கல்கி

ஆகஸ்ட் 6உ

ஆண்டு மலர்



கி. ராஜேந்திரன்

எழுதும்

## இரட்டை அரண்மனைகள்

த்ரில் தொடர் ஆரம்பம்!

**அதாச்சு ரெண்டு மாசம் - ஜூனூன், அஜ்னபி, கானூன் மாதிரி ஹிந்தி-தமிழ் தொடருக்கெல்லாம் நேரத்தை மாற்றி.... அவற்றின் நேரத்தை 'நியூஸ்' பிடித்துக் கொண்டுள்ளது. என்ன நினைக்கறாங்க டீ.வி. ரசிகர்கள் இந்த மாற்றம் பற்றி....?**

**தீனதயாளன்** : ஒன்பதரைக்கே தூங்கி விடும் வழக்கம் கொண்ட ஒரு வீட்டி லுள்ள தாத்தாவுக்கு ஜூனூன் பார்க்க முடியாம போய் அதனாலே ஜுரமே வந்து டுச்சு! அதனாலே அவங்க வீட்டிலே இந்தத் தொடரை ரெக்கார்டு செய்து மறுநாள் பார்க்க வைக்கிறாங்க! ஒரு சௌகரியம்...



• மகாதேவன்



• தீனதயாளன்



• வேதவல்லி



• மாலினி

# ஜூனூன் பார்க்காமல் ஜுரம் வந்தது!

செய்திகளைப் பார்க்கும் போது, தமிழாக்கத் தொடர் சானலுக்கு மாத் தணும்னு வீட்டிலே அடம் பிடிக்காததி னாலே, நிம்மதியா நியூஸ் பார்க்க முடியுது.

**மகாதேவன்** : சில தமிழாக்கத் தொடர் கள், குழந்தைகளோடு உட்கார்ந்து பார்க்க முடியாத அளவுக்கு 'அடல்ட் தீம்' கொண்டவையாக உள்ளன. இப்போது குழந்தைகள் தூங்கின பிறகு பெரியவங்க பார்க்க முடிகிறது - சௌகரியமாய் இருக்கு. பத்தரை மணிக்கு ஒளிபரப்பும் இந்தத் தொடர்களை மறுநாள் மதியமும் ஒளிபரப்பினால் வீட்டிலிருக்கும் பெண் களுக்கு சௌகரியம். செய்திகளை அரை மணி நேரம் ஒளிபரப்புவது டூ மச்! 'எட்டு நிமிடங்களுக்கு மேல் ஒரு நிகழ்ச்சியைப் பார்ப்பது அலுப்பு கொடுக்கும். இடை யிடையே விளம்பரங்களாவது தேவை'ன்னு ஒரு ஆய்விலே கண்டுபிடிச்சிருக்காங் களாம்.

**மாலினி** : வட இந்தியாவில் எப் படியோ, இங்கேயெல்லாம் சீக்கிரம் தூங்கி, சீக்கிரம் எழுந்திருப்பதுதான் வழக்கம். இப்படியிருக்க, எல்லாத் தமிழாக்கத் தொடர்களையுமே பார்த்துக்கிட்டிருந்த நான் பத்தரை மணிக்கு மாத்தினவுடனே மொத்தமாக அவற்றைப் பார்ப்பதையே விட்டுட்டேன். ''நல்லது தான்''கிறாங்க கணவரும், குழந் தைகளும். எனக்கு தான் ஏக்கமாக இருக்கும்.

**வேதவல்லி** : இந்த மாற்றத்திற்குப் பிறகு எனக் குத் தெரிந்த நிறைய வீடு களிலே கேபிள் கனெக்ஷன் கொடுத்துக்கத் தொடங்கிட்டாங்க. என்னதான் இட்டிக்கிட்டே அந்தத் தமிழாக்கத் தொடர்களைப் பார்த்தோம் னாலும் அவற்றோட தயாரிப்பிலே ஒரு தரம் இருந்தது. நம்மைக் கட்டிப் போட் டது. அதனாலே அவற்றைப் பத்தரைக்குத் தள்ளிப் போட்டது இழப்பாகத்தான் படுது. செய்திகளைப் பொறுத்தவரை ஏழரைக்கு சுருக்கமாகவும், எட்டரைக்கு விளக்கமாகவும் ஒளிபரப்பியது சௌகரிய மாக இருந்தது. இப்போதைய நீ - ண் - ட வளவள செய்திகள் எனக்குப் பிடிப்ப தில்லை.

பேட்டி, படங்கள் : **குல்லூ**

# தேர்தலுக்குத் தயாராகிறார் ஜெ!



"....இன்னும் சில மாதங்களில் பாராளுமன்றத்துக்கும், சட்ட மன்றத்துக்கும் பொதுத் தேர்தல் நடைபெற உள்ளது. தமிழ்நாட்டில் அ.தி.மு.க. மீண்டும் வெற்றி பெற்று ஆட்சி அமைக்க நீங்கள் உறு துணையாக இருக்க வேண்டும். தமிழகத்தில் உள்ள 39 பாராளு மன்றத் தொகுதிகளிலும் நாம் தனித்து நின்று வெற்றி பெற வேண்டும்...."

கடந்த மாதம் 21-ம் தேதி அ.தி.மு.க. தலைமை நிலையத்தில் கட்சித் தொண்டர்களி டையே ஜெயலலிதா பேசியது இது! முதல்வரின் இந்தப் பேச்சு, மாற்றுக் கட்சிகளிடையே, குறிப்பாக காங்கிரஸ் கட்சியினரிடையே பரபரப்பை ஏற்படுத்தி யது. அந்தச் சமயத்தில் டெல்லி சென்ற கவர்னர், ஜெய லலிதாவின் பேச்சைப் பிரதமரின் காதுகளுக்குக் கொண்டு சென்று, 'உங்களை மதிக்காதவர்களோடு உறவு வைத்துக் கொள்ள வேண்டாம்' என்று நூறாவது முறை யாகச் சொல்லி விட்டு வந்தார்.

"உங்களால் தனித்து நின்று வெற்றி பெற முடியுமா?" என்று தோள் தட்டினார் குமரிஅனந்தன். காங்கிரஸில் உள்ள ஜெயலலிதா ஆதரவாளர்களோ 'இந்தம்மா ஏன் இப்படியெல்லாம் பேசி, 'வொள்ளு' பண்ணறாங்க' என்று புலம்பினார்கள்! மற்ற எதிர்க்கட்சிகள் 'இந்தப் பேச்சு, காங்கிரஸை மிரட்டும் வேலை' என்பதாகப் புரிந்து கொண்டன.

ஆனால் ஜெயலலிதாவை நன்கு அறிந்தவர்கள் இதற்கு வேறு ஒரு காரணம் கற்பிக்கிறார்கள்.

அவருக்கு எப்போதுமே மத்திய ஆட்சி மீது ஒரு கண். இன்றைக்குள்ள சூழ்நிலையில் மத்தியிலே எந்தக் கட்சியும் பெரும் பான்மை பெற வாய்ப்பில்லை. கிட்டத்தட்ட ஒருமித்த கொள்கைகளை உடைய சில கட்சிகள் இணைந்து கூட் டாட்சிதான் அமைக்க இயலும். இது பற்றி ஹெக்டே பேசி, ராவும் 'சிந்திக்க வேண்டிய விஷயம்தான்' என்று கூறி விட்டார். அப்படி ஒரு நிலை வரும் போது, அ.தி.மு.க. வுக்கு நாடாளுமன்றத்தில் கணி சமான எண்ணிக்கையில் எம்.பிக்கள் இருந்தால் அவர் களை ஒதுக்க முடியாது. ஜெ. இழுத்த இழுப்புக்கு மத்திய அரசே கட்டுப்படும்!

ஜெ.யுடைய இந்தக் கனவு நிறைவேறுகிறதோ இல் லையோ, தேர்தலைச் சந்திக்க அ.தி.மு.க. தயாராகி விட்டது என்பது முதல்வரின் சமீபத்திய பல அறிவிப்புகளிலிருந்து தெரியவருகிறது. கடந்த நான்கு வருடங்களில் சமுதாயத்தின் சகல மட்டங்களிலும் கட்சி வாங்கியிருக்கும் அவப் பெய ரைச் சில திடீர் சலுகைகளின்

மூலம் துடைத்தெறிய ஜெயலலிதா முயன்று கொண்டிருக்கிறார். ஆட்சியின் நடவடிக்கைகளைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்கு இது பனிச்சென்று விளங்கும்.

- 31000 கிராம உதவியாளர்களை அரசு ஊழியர்களாக மாற்றியது.
- தொகுப்பூதியம் பெற்று வந்த 6000 ரேஷன் கடை ஊழியர்களுக்கு அடிப்படை சம்பளத்துடன் ஊதியம் வழங்கியது.
- ரேஷன் அரிசி விலையைக் கிலோ இரண்டு ரூபாயாகக் குறைத்தது.
- எட்டாயிரம் ஆசிரியர்களுக்கு வேலை வாய்ப்பு.
- மின்சார இலாகாவில் 3000 காலியிடங்களைப் பூர்த்தி செய்ய இருப்பது.
- ஓய்வு பெற்ற காவலர்களுக்குக் கோவில் பாதுகாவலர்கள் வேலை.

இப்படி அரசுத் தரப்பில் என்ன செய்ய முடியுமோ, அதையெல்லாம் செய்து வருவது ஒரு பக்கம் இருக்க, கட்சியைத் தம் பிடிக்குள் வைத்துக் கொள்ளும் விதமாக, ராஜ்யசபா உறுப்பினர் பதவிகளை கட்சிக்காரர்களுக்கே கொடுத்துள்ளார் முதல்வர்.

இது தவிர, அரசுப் பணிகளில் காலியிடங்களைப் பூர்த்தி செய்யும்போது கட்சிக்காரர்கள் நலன் கவனிக்கப்பட வேண்டும் என்று வாய் மொழி உத்தரவு அமைச்சர்களுக்குப் போடப்பட்டுள்ளது. சட்டமன்ற உறுப்பினர்கள் தேர்தலின் போது கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றுவதில் கவனம் செலுத்த வேண்டும் என்று கண்டிப்பான உத்தரவு போடப்பட்டுள்ளது. இதுநாள் வரை தொகுதிப் பக்கம் தலைகாட்டாது காரியத்தில் கண்ணாக இருந்த ஆளும் கட்சி உறுப்பினர்கள் தொகுதிகளில் உலா வருகிறார்கள். "தொடர்ந்து 21 நாட்கள், தெருத் தெருவாகச் சென்று மக்கள் குறைகளைக் கேட்பேன்" என்று திருவொற்றியூர் அ.தி.மு.க. எம்.எல்.ஏ. குப்பன் அறிவித்திருக்கிறார்!




முதல்வரின் சகல செயல்களிலும், அரசியல் ஆதாயம் பெறும் நோக்கம் இருக்கிறது என்கிறார்கள் எதிர்க்கட்சிக்காரர்கள். உதாரணமாக, தேவர் சிலையைச் சென்னையில் திறந்தது; விவசாயத் தலைவர் நாராயணசாமி நாயுடுவுக்குச் சிலை வைக்க நிதியுதவி ஆகிய செயல்கள் சில குறிப்பிட்ட வகுப்பினரை ஈர்க்கும் செயல்கள் என்கிறார்கள். அதே போல், மன்னார்குடி மற்றும் மதுரை கோயில்களுக்குக் கும்பாபிஷேக திட்டங்களை நிறைவேற்றி வைப்பது 'மகாமகப் பிரச்னையை' ஒரேயடியாக அமுக்குவதற்காகவும், ஆஸ்திகர்களுக்கான அரசு இது என எடுத்துக்காட்டவும்தான் என்று எதிர்க்கட்சியினர் விமர்சிக்கிறார்கள்.

அரசு சார்பில் வெளியிடப்பட்ட அறிவிப்புகள், வாக்குகளை நோக்கமாகக் கொண்டவை என்பது 'ரின்' வெண்மையாகத் தெரிகிறது. பொது விநியோகத் திட்டப்படி வழங்கப்படும் அரிசிக்கு மத்திய அரசு மான்யம் தர வேண்டும் என்றும், இல்லையேல் ரேஷன் அரிசி விலையுயர்வைத் தவிர்க்க முடியாது என்றும் சில மாதங்களுக்கு முன்னர் முதல்வர் சொன்னார். அப்படியிருக்க, சமீபத்திய விலைக் குறைப்பு எப்படி சாத்தியம்? ஏற்கெனவே நிதிப் பற்றாக்குறையில் திக்குமுக்காடிப் போய்க் கொண்டிருக்கிறது தமிழக அரசு. கடந்த சில மாதங்களில் ஓரிருமுறை ரிசர்வ் வங்கி அனுமதித்த அளவுக்கு மேல் பணத்தை எடுத்ததற்காக, கடுமையாக எச்சரிக்கை செய்யப்பட்டிருக்கிறது. மத்திய, மாநில அரசு அதிகாரிகளின் தயவினால் விஷயம் பத்திரிகைகளுக்கு லீக் ஆகாமல் அமுக்கப்பட்டது.

இப்படி நிதி விஷயத்தில் தள்ளாட்டம் இருக்க, வருடத்துக்குப் பத்து கோடி தொடர்ந்து செலவு வைக்கும் மேலும் ஓர் அறிவிப்பு வெளியாயிற்று : கிராம உதவியாளர்களை அரசு ஊழியர்களாக மாற்றிய அறிவிப்பு!

தேர்தல் காலத்தில் கிராம அளவில் செல்வாக்கைப் பிரயோகிப்பதில் இந்த ஊழியர்கள் மிகவும் உதவுவார்கள் என்ற எதிர்பார்ப்பில் செய்யப்பட்டுள்ள சலுகை. நிதி ஆதாரங்களைப் பற்றிக் கவலைப்படாமல் முதல்வர் சொல்லி விட்டார். இப்படிச்

சலுகைகளுக்கு மேல் சலுகைகள் அறிவித்துக் கொண்டே போனால், தேர்தலில் ஜெயிப்பது சுலபமாகி விடும் என்பது ஆளும்கட்சியின் நம்பிக்கை.

'இந்த நம்பிக்கை பொய்த்துப் போகும்' என்கிறார் தமிழ்நாடு காங்கிரஸ் (இந்திரா) செய்தித் தொடர்பாளர் கிள்ளிவளவன்.

"அரிசி விலை குறைப்பு, ஆட்களுக்கு வேலை கொடுப்பது போன்றவை, இந்த ஆட்சியை நீட்டிக்க எந்த வகையிலும் உதவாது. நான்கு வருடமாக நடக்கும் ஊழல், யதேச்சதிகாரம், அராஜகம் ஆகியவைகளை மக்கள் கூர்ந்து கவனித்துக் கொண்டு வருகிறார்கள். இரண்டு ரூபாய்க்குப் போடப்படும் மோட்டா ரக மட்டமான அரிசியை யாரும் வாங்க மாட்டார்கள். தவிர மாதத்திற்கு இருபது கிலோ போட்டுக் கொண்டிருந்ததை பன்னிரண்டு கிலோவாகக் குறைத்து விட்டார்கள். இதையெல்லாம் சொல்லி நாங்கள் பிரசாரம் செய்வோம்..." என்கிறார் கிள்ளவளவன்.

கட்சிக்காரர்களுக்கு ராஜ்யசபா உறுப்பினர் பதவி கொடுத்ததைப் பற்றிக் கூட, ஒருவிதமான கவலையுடன்தான் அபிப்ராயம் சொல்கிறார்கள் அ.தி.மு.க.வினர்.

"இதை நாங்கள் வெளிப்படையாகச் சொல்ல முடியாது. தமிழ்நாடு முழுக்க கட்சி, எஸ்.டி.எஸ். கோஷ்டி, கண்ணப்பன் கோஷ்டி என்று பிளந்து இருக்கிறது. சமீபத்தில் நடந்த நிர்வாகிகள் தேர்தலில், துப்பாக்கிச் சூடு செய்யுமளவுக்கு இந்த கோஷ்டியினரிடையே மோதல் இருந்தது. ராஜ்யசபாவுக்குப் போடப்பட்டுள்ளவர்கள் அனைவருமே எஸ்.டி.எஸ்.ஸுக்கு வேண்டியவர்கள். அம்மாவைச் சுற்றியுள்ளவர்கள் கட்சியைக் கைப்பற்றும் நோக்கத்துடன் வேலை செய்து வருகிறார்கள். இந்த மோதல்களில் உள்ள ஆபத்தான விஷயம் என்னவென்றால் இரு கோஷ்டியினரும் ஏகப்பட்ட பணம் வைத்திருக்கிறார்கள். தேர்தலின்போது மாற்றுக் கட்சியினருக்குப் பண வசதி செய்து கொடுத்தாவது எதிர்கோஷ்டி ஆளை தோற்கடிக்க முயல்வார்கள். அம்மா இந்த போக்கைக் கவனித்துக் கொண்டு வருகிறார். தேர்தலுக்கு முன்னர் கட்சிக்கு அவப்பெயரை உண்டாக்கிய மந்திரிகளும் பிரமுகர்களும் ஓரங்கட்டப்படுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். மற்றபடி சில பிரிவினருக்குக் காட்டப்படும் சலுகைகளை அரசியல் ஆதாயங்களாக எடுத்துக் கொள்ளக் கூடாது. இதை வைத்தெல்லாம் வெற்றி பெற முடியாது. அப்படிப் பார்க்கப் போனால் விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் கொடுத்த தி.மு.க. அல்லவா சென்ற தேர்தலில் வெற்றி பெற்றிருக்க வேண்டும்?" என்று நியாயமான கேள்வி கேட்கிறார் அ.தி.மு.க. மேல்மட்டப் பிரமுகர் ஒருவர்.



"கையில் காசில்லாமல் சாப்பிட வர்றவங்க பயப்படுவாங்கத்தான். அதுக்காக டேபிளையெல்லாம் ஆட்டுக்கல் 'ஷேப்'பில் போடணுமா?"

— ஞா. ஞானமுத்து

ஆனால் நிர்வாகிகள் தேர்தலில் ஏற்பட்ட கோஷ்டி மோதலைக் கண்டு கட்சித் தலைமை, சற்று கலங்கிப் போனது உண்மைதான். இதைத் தொடர்ந்து பொதுத் தேர்தலின் போதாவது கட்சியைக் கட்டுக்கோப்பாக வைத்திருக்க பல நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. இதை 'விவரம் அறிந்தவர்கள்' சொல்கிறார்கள்.

உதாரணமாக, சில நாட்களுக்கு முன்னர், அ.தி.மு.க. ஆட்சியின் முதுகுத்தண்டாக விளங்கும் ஸ்பெஷல் பிராஞ்சு போலீஸ்காரர்களுக்கு ஒரு உத்தரவு போடப்பட்டது. ஒன்றிய அளவில், கோஷ்டிப் பூசல் செய்து கொண்டிருக்கும் பிரமுகர்களைப் பற்றிய தகவல்களைச் சேகரித்துக் கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது. தவிர, எல்லா தொகுதிகளிலும் அ.தி.மு.க. சார்பில் யாருக்கு தேர்தல் டிக்கெட் தரலாம் என்று ஆய்ந்து சொல்லும்படி உத்தரவிடப்பட்டது.

88 எம்.எல்.ஏக்கள் அ.தி.மு.க.விலிருந்து வெளிவரத் தயாராக இருக்கிறார்கள் என்று சுவாமி


கிள்ளிவளவன்



சொன்னதிலிருந்து, எம்.எல்.ஏக்களின் மீது கண்காணிப்பு கடுமையாகி இருக்கிறது. 'தெய்வ குற்றத்திற்கு ஆளாக வேண்டாம்' என்று சிலர் அன்புடன் கேட்டுக் கொள்ளப் பட்டிருக்கிறார்கள்!

ஒரு கட்டத்தில் தம்மை டிஸ்மிஸ் செய்தால் அனுதாப ஓட்டுக்கள் மூலம் ஆட்சியை மீண்டும் பிடிக்கலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தார் ஜெயலலிதா. ஆனால் ராவ் விவரம் தெரியாதவரா? அந்த வாய்ப்பை ஜெ.வுக்குக் கொடுப்பாரா? இப்போது ராஜ்யசபை தேர்தல் முடிந்தபின் ராஜினாமா செய்து விட்டு தேர்தலைச் சந்திக்க ஜெ. விரும்பினாலும், இடைக் காலத்தில் சென்னாரெட்டி ஏதாவது 'விளையாடி' விடுவார் என்று தயங்குகிறாராம்.

இப்படி ஆட்சி, கட்சி மட்டங்களில் விவகாரங்கள் நடந்து கொண்டிருக்க, அரசியல் ஆதாயத்திற்கு மேலும் அதிரடி அறிவிப்புகளைக் கைவசம் வைத்திருக்கிறார் ஜெயலலிதா.

ஜாதிச் சங்கங்கள், அரசு ஊழியர் அமைப்புகள் மாநாடுகளைக் கூட்டுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இதை நீங்கள் படித்துக் கொண்டிருக்கும்போது அரசு ஊழியர் மாநாட்டில் பல புதிய சலுகைகளை ஜெயலலிதா அறிவித்த செய்திகள் வந்திருக்கலாம்!

ஆட்சியில் உள்ளவர்கள் இப்படி தேர்தலுக்குத் தயாராகும்போது மக்களும் தேர்தலுக்குத் தயாராகிறார்கள் என்பதை மறந்து விடுகிறார்கள்.

'நாலு ஆண்டுகள் மோசமான ஆட்சி வழங்கி விட்டு தேர்தல் ஆண்டின் போது திடீர் சலுகைகளை அறிவிப்பது தார்மிக நோக்கில் சரியானதா என்பதை மக்கள் சிந்தித்துப் பார்க்கும் அளவில் ஜனநாயக உணர்வு பெற்றுள்ளார்களோ என்பது சந்தேகம். ஆனால் மோசமான ஆட்சியின் கவடுகள் அவர்கள் உள்ளத்தில் ஆழப் பதிந்துதான் இருக்கும். குறிப்பாக 'லஞ்ச ஊழல் என்பது பெரிய நகரங்களில் மேல் மட்ட மக்களிடையே நடக்கும் சர்ச்சையே தவிர சாமானியர்களை பாதிக்கிற விஷயமல்ல' என்ற நிலை மாறி விட்டது. இன்று லஞ்ச ஊழல் மேல்மட்டத்தில் மட்டும் இல்லை; அடிவாரம் வரை பாய்ந்து பரவியுள்ளது. இதனால் எல்லா மக்களும் துன்பப்பட்டு வருகின்றனர்.

ஆயிரம் கார் பவனி, ஹெலிகாப்டர் பயணம், கட்அவுட் கலாசாரம் போன்றவை பிரமிப்பை ஏற்படுத்தியது போக இப்போது அலுப்பையும் வெறுப்பையும் உருவாக்க ஆரம்பித்துள்ளன. மற்றும் சட்ட ஒழுங்கு சீர்குலைவு, கிறிஸ்துவர்களை அன்னை மேரி போஸ்டர் பிரச்னையில் பகைத்துக் கொண்டது, போலீஸ் ஸ்டேஷன்களில் நடக்கும் அக்கிரமங்கள்; மேல்மட்ட லஞ்ச ஊழல்கள், நீதிமன்ற அவமதிப்புகள் போன்ற பலவற்றையும் திடீர் சலுகைகளால் மறக்கடிக்க முடியுமா, அப்படி மக்கள் மறந்து விட எதிர்க்கட்சியினர் அனுமதிப்பார்களா என்ற கேள்விகள் எழுகின்றன.

மக்கள் சிந்திக்காமல் இரு விரல் உயர்த்திக் காட்டி வோட்டுப் போட்ட காலம் மலையேறி விட்டது. சிந்திக்காமல் இருக்க முடியாது என்ற அளவுக்கு காரியங்கள் நடந்து விட்டன; பிரசார சாதனங்களும் வளர்ந்து விட்டன. ஆக, ஜெ. ஆட்சியோ அல்லது வேறு ஒரு கட்சி ஆட்சியோ - நல்லதோ, கெட்டதோ - அது மக்கள் தாங்களே விரும்பி வரவேற்று ஏற்றுக் கொண்டதாகத்தான் இருக்க முடியும்.

— ப்ரியன்



''என்ன டாக்டர் இது! ஸ்டெதஸ்கோப்பை என் காதுல வைக்கறீங்க!''

''இதுவரை நீங்க எனக்கு ஐந்நூறு ரூபாய் பீஸ் பாக்கி. இப்படி பண்றது 'நியாயமா'னு உங்க மனசாட்சியை நீங்களே கேட்டுச் சொல்லுங்க.''

— ஜெ. கண்ணன்




1995 ஜூலை 23
யுவ ஆடி 7
மலர் : 53
இதழ் : 51

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.




## குண்டுமழையில் யாழ்ப்பாணம்!

ஈழத்தில் விடுதலைப் புலிகளுக்கும் இலங்கை ராணுவத்துக்கும் இடையே நடந்து கொண்டிருக்கும் யுத்தம் உச்சக்கட்டத்தை நெருங்குகிறது.

யுத்தத்தின் முடிவும், வெற்றி தோல்விகளும் எப்படியிருப்பினும், அதனால் மிக மோசமாக பாதிக்கப்பட்டுள்ளவர்கள் சாமானிய மக்கள்தாம்.

இன்றைய நவீன போர் முறைகள் காரணமாக உலகின் எந்தப் பகுதியில் போர் நடந்தாலும் இதே நிலை உருவாகிறது; போரிடும் ராணுவப் பிரிவுகளைக் காட்டிலும் சாமானியர்கள் அதிக துன்பத்துக்குள்ளாகிறார்கள்.

இந்த சந்தர்ப்பத்தில், தமிழ்நாட்டுத் தலைவர்கள் எல்லோரும் ஈழத்தமிழர்கள் அவதிக்குள்ளாவது குறித்து வருத்தமும் இலங்கை அரசின் மீது கண்டனமும் தெரிவித்திருக்கிறார்கள். தாக்குதலில் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்காக நாமும் வருந்தி அனுதாபப்படுகிறோம்.

ஆனால், இந்த நிலைமைக்கு சந்திரிகா அரசைக் காட்டிலும் விடுதலைப்




புலிகளும் அதன் தலைவர் பிரபாகரனும்தான் அதிகப் பொறுப்பு ஏற்க வேண்டியவர்கள். நமது தமிழ்நாட்டுத் தலைவர்கள், அரசியல் காரணங்கள் கருதி இந்த உண்மையைச் சுட்டிக்காட்டாமல் இருக்கிறார்கள்!

இலங்கையில் அமைதியை நிலைநாட்டுவதாகத் தமது தேர்தல் வாக்குறுதியில் குறிப்பிட்ட சந்திரிகா குமாரதுங்கா, அதிபரானதும் அதன்படியே புலிகளைப் பேச்சு வார்த்தைக்கு அழைத்தார். யாழ்ப்பாண முற்றுகையைத் தளர்த்தி, அத்தியாவசியப் பொருட்களின் போக்குவரத்துக்கு வழி செய்தார்.

ஆனால் புலிகளோ, பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்தபோதே தங்கள் வழக்கமான பாணியில் செயல்பட்டனர். ரகசியமாகத் தங்களை பலப்படுத்திக் கொண்டு, போர் நிறுத்த ஒப்பந்தத்தை மீறி யுத்தத்தில் இறங்கினர். ஏப்ரல்

*வீரம் என்பது தாக்குதலும் அழித்தலும்*
*மட்டுமல்ல, போரையும்*
*ஆயுதங்களையும் கைவிட்டு,*
*அமைதியையும் ஜனநாயகத்தையும்*
*ஏற்பதும் வீரம்தான்.*

19ஆம் தேதியன்று நடந்த அந்த அத்துமீறலின் தொடர்ச்சிதான் இன்று நடந்து கொண்டிருக்கும் யுத்தம்.

தமது படையினர் தாக்கப்பட்ட பிறகு எந்த அதிபரால் அதைப் பார்த்துக் கொண்டு சும்மாயிருக்க முடியும்? போருக்கு இலங்கை மக்களின் ஆதரவையும் நிதியுதவியையும் கோரியுள்ள அதிபர், 'தீவிரவாதத்தை வெற்றி காண்போம்' என்று உறுதியளித்துள்ள அதே சமயத்தில் ஓர் எச்சரிக்கை விடுத்திருக்கிறார். கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாக நீடித்து, 35000க்கும் மேற்பட்ட உயிர்களை பலிகொண்டுள்ள இந்தப் பிரச்னைக்கு அரசியல் ரீதியான முறையில்தான் நிரந்தரத் தீர்வுகாண முடியும் என்பதே அந்த எச்சரிக்கை.

வீரம் என்பது தாக்குதலும் அழித்தலும் மட்டுமல்ல, போரையும் ஆயுதங்களையும் கைவிட்டு, அமைதியையும் ஜனநாயகத்தையும் ஏற்பதும் வீரம்தான். இதனைப் புலிகள் தலைவர் பிரபாகரன் உணர வேண்டும். இந்த விஷயத்தில் பாலஸ்தீனிய விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராஃபத்தை, பிரபாகரன் முன்னுதாரணமாகக் கொள்ளலாம்.

பிரபாகரன் மட்டும் இந்தப் பாதையைத் தேர்ந்தெடுத்தால், ஜனநாயக முறையிலேயே அவர் ஒரு பலமிக்க தலைவராக உருவாக முடியும். அவரைப் பிடித்தனுப்பச் சொல்லும் இந்திய அரசு கூட வாயடைத்துப் போகும்.

இந்த முடிவை எடுப்பதற்கான வீரமும் விவேகமும் பிரபாகரனிடம் இருக்கிறதா...?

கிரெடிட் அனாலிசிஸ் அண்ட் ரிசர்ச் லிமிடெட் அமைப்பின் மதிப்பீட்டுக் குழு, "CARE A (FD)" மதிப்பீட்டை வழங்கியதைத் தொடர்ந்து, சான்மேக் பிக்சட் டெபாசிட்டுகளுக்கு சாதகமாக மேலும் பல சிறப்புகள் சேர்ந்துள்ளன. அசல் மற்றும் வட்டிக்கு பாதுகாப்பு போதிய அளவில் உள்ளது என்று கணிக்கப்பட்டுள்ளது. எனவே எங்கள் மீது நீங்கள் வைத்துள்ள நம்பிக்கை சரியானதே என்று புரிந்து கொண்டிருப்பீர்களே?




டெபாசிட்தாரர்கள் கொண்டுள்ள இந்த முழுமையான நம்பிக்கையின் காரணத்தால்தான் மற்றவர்கள் வியக்கும் வண்ணம் சான்மேக் இந்த அளவுக்கு உயர்ந்து பல சாதனைகளையும் படைத்திருக்கிறது.

பொது டெபாசிட்டுகள் ரூ. 25 கோடிக்கு உயர்ந்துவிட்டன ■ நிகர மதிப்பு ரூ. 9.5 கோடியாக உயர்ந்துள்ளது. ■ ஈடுபடுத்தப்பட்டுள்ள மொத்த நிதியானது ரூ. 50 கோடியைத் தாண்டிவிட்டது. ■ EPS இப்போது ரூ.5 (ஆண்டுக்கணிப்பிலானது) என்ற அளவில் உள்ளது. ■ கிளைகளின் எண்ணிக்கை 26 ஆக உயர்ந்துள்ளது.

இந்த CARE A (FD) மதிப்பீட்டுடன், தன் தகுதிக்கு உரிய மற்றும் ஓர் அங்கீகாரத்தை சான்மேக் பெறுகிறது. அத்துடன் இதனுடைய டெபாசிட் திட்டங்கள், சிறந்த பாதுகாப்புக்கான மற்றும் ஒரு முத்திரையைப் பெறுகின்றன.

<u>கிளைகள் :</u> சென்னை: அ[illegible] நகர் மேற்கு ✆ 6214454, 6262219. அண்ணா சாலை ✆ 8520921. அசோக் நகர் ✆ 48[illegible]525, 4824624, 4824625, 4824757. டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை ✆ 8258637, 8240051. மயிலாப்பூர் ✆ 4992488. புரசைவாக்கம் ✆ 6425036, தி. நகர். ✆ 8278515 தாம்பரம் ✆ 2366327. கோயம்புத்தூர் ✆ 446375. கடலூர் ✆ 22728. கும்பகோணம் ✆ 24844. மதுரை ✆ 23334.

அசத்தும் விஞ்ஞானம்!




# ஹலோ! அக்கட யாரு சம்சாரிக்குந்நது...?

சேலத்துப் புண்ணாக்கு வியாபாரியும் குண்டூர் மிளகாய் வியாபாரியும் போனில் பேசுவதாய்க் கற்பனை செய்து கொள்ளுங்கள். இவர் தமிழில் பேச, அவர் தெலுங்கில் பேச, மிஞ்சுவது குழப்பம்!

ஒரு முனையில் பேசுபவரது பேச்சை, மறுமுனையில் இருப்பவரது மொழிக்கு மாற்றி ஒலிக்கச் செய்தால் பிரச்னை பாதி தீரும். இதே மொழிபெயர்ப்பு இரு வழிகளிலும் செயல்பட்டால் மீதி பிரச்னையும் போயே போச்!

"கேட்க நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இது சாத்தியமா?" என்ற கேள்வியை ஜப்பானியரிடம் கேட்டால், "ஆமாம்" என்று அவர் ஜப்பானிய மொழியில் சொன்னாலும், அது, தமிழிலேயே உங்கள் காதுகளில் ஒலிக்கும்!

இதற்குண்டான புதிய, புரட்சிகரமான டெக்னாலஜியை ஜப்பானும் தென்கொரியாவும் உருவாக்கி இருக்கின்றன. சுமார் இரண்டாண்டு கால ஆராய்ச்சியின் கண்டுபிடிப்பு இது.

இதில் மூன்று கட்டங்கள் உள்ளன. முதல் கட்டத்தில், ஒரு முனையில் பேசுபவரது மொழியின் வார்த்தைகளைப் புரிந்து கொள்ளுவது. அதை சங்கேதக் குறிகளாய் மாற்றுவது. இரண்டாவது கட்டத்தில், சங்கேதக் குறிகள், மறுமுனையில் பேசுபவரது மொழியின் வார்த்தைகளாய் மொழிமாற்றம் செய்வது. இறுதிக் கட்டத்தில், மொழி மாற்றம் செய்யப்பட்ட வார்த்தைகளை, மறுமுனைக்காரருக்குக் கேட்கச் செய்வது. இந்த மூன்று கட்டப் பணிகளும் நடந்து முடிய எடுத்துக் கொள்ளப்படும் நேரம் – ஜஸ்ட் மூன்று விநாடிகள்!

பரீட்சார்த்த முறையில் இந்த வசதி தற்போது ஜப்பானிய, கொரிய மொழிகளுக்கிடையே மட்டுமே செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. இரண்டு மொழிகளின் இலக்கணமும் மொழியமைப்பும் ஒன்று போல இருப்பது இங்கே முக்கியமான விஷயம்.

இப்போது அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி ஆகிய நாடுகளிலும் இது போன்ற டெலிபோன் மொழிமாற்ற உபாயம் பற்றிய ஆராய்ச்சி நடைபெறுகிறது.

நம் நாட்டில் இந்திக்கார மத்திய அரசு இதனை நடைமுறைப்படுத்தினால் நம் டெலிபோன்களும் ஜானூன் தமிழைப் பிடிவாதமாய்ப் பேச ஆரம்பித்து விடுமோ!

— எஸ். சந்திரமௌலி

நன்றி : பிசினஸ் லைன்

## சில்லறை விஷயம்

நண்பர்களோடு, ஒரு கடை வாசலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தேன்.



அப்போது ஒரு பிச்சைக்காரர், பிச்சை கேட்டு வந்தார். 'கொடுக்கிற' நிலையில் நாங்கள் இல்லாததால், என் நண்பன், "சில்லறையா இல்லை" என்றான். உடனே அந்த ஆள், "சில்லறை தானே வேணும்? நான் தரேன். நோட்டை எடுங்க" என்று மூட்டை சில்லறையைக் கீழே கொட்ட, வேறு வழியின்றி கையில் இருந்த ஒரு ஐந்து ரூபாய் நோட்டை 'வைக்க' வேண்டியதாகிவிட்டது! நோட்டை எடுத்துக் கொண்டு, சில்லறையாக நாலே முக்கால் கொடுத்து விட்டுப் போயே விட்டார்! நாலணா தந்த வள்ளல் முகத்தைப் பார்க்க வேண்டுமே! அதன் பிறகு யாராவது பிச்சை கேட்டால் ஐந்தோ, பத்தோ (காசுதான்!) உடனே கொடுத்து விடுகிற வழக்கம் எங்கள் குழுவுக்கே வந்து விட்டது!

— வைரமுத்துப்ரியன், திருச்சி - 15.

## தைரிய தெரபி

மருத்துவத் துறையில் 'அரோமா தெரபி' என்றொரு வகை உண்டு. 'அரோமா' என்றால் நறுமணம். 'க்ளமாட்டிகஸ்' என்னும் ஒருவகைப் பூவிலிருந்து தயாரிக்கப்படும் 'சென்ட்'டை நுகர்பவர்களுக்கு மிகுந்த தைரியம் உருவாகி விடுவதாகவும், படு கூச்ச சுபாவம் உள்ளவர்களைக் கூட இது, ஒரே நாளில் தைரிய சிகாமணிகளாக்கி விடுவதாகவும் மருத்துவ வல்லுநர்கள் கூறுகிறார்கள்!

ஆதாரம் : 'பொதுச் செய்திகள் 1000'

— புத்தனாம்பட்டி மணி, திருச்சி - 18.

## ரோடு காலி!

திருச்சி நகரப் புதிய புரட்சிக் கமிஷனர் ஸ்வரண் சிங், சாலைகளை சீரமைத்து, புதிய சாலைகளைப் போடும் பணியில் தீவிரமாக ஈடுபட்டு வருகிறார். இன்னும் பணி பூர்த்தி ஆகாத நிலையில் ம.தி.மு.க. மாநாட்டுக்காக வரவேற்பு வளைவுகள் வைக்கிற ஜோரில் புதிய சாலையைப் பதம் பார்த்து விட்டார்கள்! ஹூம்!

— லக்ஷ்மண்ராஜா, திருச்சி - 8.

# 'ருருரு' என்றால் என்ன?

## கவர்கள் பிழைக்க!

ஸ்ரீரங்கம் போஸ்ட் ஆபீஸ் ஒன்றில் ஸ்டாம்ப், கவர்கள் ஒட்ட பசையும், கை கழுவ சிறு கிண்ணத்தில் நீரும் வைத்திருக்கிறார்கள்! இதனால் விரலிடுக்குப் பசையை கவரில் தடவி அசிங்கப்படுத்துவது இங்கே தவிர்க்கப்படுகிறது. பிற போஸ்ட் ஆபீஸ்களும் இதைக் கடைப்பிடித்தால் என்ன?

— ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

"உனக்கு மகனா பொறந்ததற்கு பதிலா வேற யாருக்காவது 'வளர்ப்பு மகனா' பொறந்திருக்கலாம்!"

— ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.



संस्कृतम् संस्कृतम् संस्कृतम्

**SANSKRIT THROUGH CORRESPONDENCE**

# *Sanskrit Through Correspondence*

# சமஸ்கிருதம்

## அஞ்சல் வழிக்கல்வி

சமஸ்கிருத மொழியை இப்பொழுது நீங்களும் தபால் மூலம் ஆறே மாதங்களில் பேச எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளலாம். இந்தியாவிலேயே முதல்முறையாக சமஸ்கிருதத்தை தமிழிலும், ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து 15 அத்தியாயங்களை, 67 பாடங்களாக, 6 புத்தகங்களில் அளிப்பதில் பெருமையடைகிறோம். எளிதில் கற்றுப்புரிந்துகொள்ளும் வகையில் தொகுத்து இயற்றப்பட்ட பாடங்கள் மாதம் ஒருமுறை தபால் மூலம் அனுப்பப் படுகிறது.

நூற்றுக்கணக்கான மாணவர்கள் இப்பயிற்சியில் சேர்ந்து தேவ மொழியான சமஸ்கிருதத்தை கற்றுக்கொண்டுள்ளனர். ஏன் நீங்களும் இன்றே சேர்ந்து இராமாயணம், மஹாபாரதம், பகவத்கீதை போன்ற தேவ காவியங்களை சமஸ்கிருத மொழியிலேயே படித்துப் பயன் பெறலாமே! அவைகளில் நல்ல செய்திகள் அடங்கியுள்ளன.

*இலவச Prospectus பெற இன்றே எழுதுங்கள்*



**The Programme Officer:**
**INDIANA SANSKRIT ACADEMY**
C/o IAMS, P.B. No. 1108, Bashyakaralu Road (E)
R.S. Puram, Coimbatore - 641 002. Tamil Nadu.

---

கேட்டறியுங்கள் உங்கள் புதிய

# ஜாதகபலன் ஜோதிட போஃன்

## இந்த வாரபலன்கள்

**0011 222 222 0+☐☐**

மேலே கொடுத்துள்ள பதினொரு எண்களையும் டயல் செய்வதுடன் உங்கள் சூரிய ராசிக்குக் கொடுத்துள்ள இரண்டு எண்களையும் டயல் செய்யவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
| 37 | 38 | 39 | 40 | 41 | 42 |
| துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |

**சுவாமி யோகாநந்த் போன்**

வேலை? தனம்? உறவுகள்? மகப் பேறு? சட்டப் பிரச்சனை?

1008 மஹா மண்டலேஸ்வர் சுவாமி யோகாநந்தஜி மகராஜ் இடமிருந்து போனில் உங்களுடைய எல்லா பிரச்சனைக்கும் தீர்வு கேட்டறியுங்கள்.

**001 122 221 1727**

## பொருத்தம்



உங்கள் துணையும் நீங்களும் ஒருவருக்கொருவர் பொருத்தமானவர்களா? என்று தெரிந்து கொள்ளுங்கள்

**☎ 0011 222 222 043**

## பட்சி சாஸ்திரம்



ஒரு பண்டைய ஆரூட முறை உங்கள் குறிப்பிட்ட கேள்விகளுக்கு பதில் சொல்கிறது.

**☎ 0011 222 222 025**

இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள். எம் & ஏ. யு.எஸ்.ஏ.

## ஆமூர் பாய்

**பா**ய் என்றதும் பத்தமடைதான் நினைவுக்கு வரும். ஆனால், அதற்கு ஈடாக, மிகக் குறைந்த விலையிலேயே, திருச்சிக்கு அருகே உள்ள 'ஆமூர்' கிராமத்தில் தரமான பாய்கள் கிடைக்கின்றன. இங்கே மக்களுக்குத் தொழிலே பாய் பின்னுவதுதான்!

— ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

## 1132

**சா**தாரமாக இரட்டையர்கள் என்றால் நடை, உடை, உடல் வாகு, முகம் எல்லாம் ஒரே மாதிரி இருப்பது இயற்கைதான். ஆனால் பப்ளிக் எக்ஸாம் மார்க் கூட ஒரே மாதிரி இருந்தால் ஆச்சர்யம்தானே? திருச்சி செயின்ட் ஜோசப் பெண்கள் மேநிலைப் பள்ளி மாணவிகள் சுமித்ரா, சுசித்ரா இருவரும் இவ்வருட +2 பரீட்சையில் எடுத்துள்ள மார்க்குகள் 1132!

## ருருருரு

**ஸ்ரீ**ரங்கம் தொகுதி எம்.எல்.ஏவும் வேளாண்மைத் துறை அமைச்சருமான கு.ப. கிருஷ்ணன் தமது கார் எண் TN 45 J 5555 என்பதை, "டி.என்.45 ஜே. ருருருரு" என்று செந்தமிழ்ப்படுத்தியுள்ளார்!

## பயணம்

**தி**ருச்சி தெப்பக்குளம் அருகில் நெரிசல் மிகுந்த சாலையில் உள்ள ஒரு காவல் துறை அறிவிப்பு வித்தியாசமாக உள்ளது.

"பயணிகள் தூங்கினால் சொகுசுப் பயணம். டிரைவர் தூங்கினால் இறுதிப் பயணம்!"

— வெங்கடேஸ்வரன், வானாடி.

**"வேண்டாம், வேண்டாம்! மறக்காம இருக்க கொஞ்ச நேரம் வேடிக்கை பார்த்துட்டுப் போயிடறேன்!"**

**– இரா. திலீப், திருச்சி – 14.**



# என்னுயிரும் நீயல்லவோ

பாலகுமாரன்

சொர்ணலட்சுமியின் வீடு, நாகர்கோவிலில் ஒரு சந்தில் இருந்தது. வாடகை வீடு. வெறும் ஓட்டு வீடு. மழை பெய்தால் ஒழுகும். வெயில் காலத்தில் வீட்டிற்குள் தகிக்கும். தண்ணீருக்கு வெகுதூரம் போக வேண்டும்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும் வரை அந்த வீட்டின் குறைபாடுகள் எதுவும் அவள் மனத்தில் தைக்கவில்லை. பிளஸ்டு எழுதி, சம்பாதிப்பது பற்றிப் பேச்சு வந்த போது, பிறர் வருமானம் ஒப்பிட்டுப் பார்த்தபோது வாழ்க்கையின் வசதிகள் தெரிந்தன. கூடப் படித்த தோழியின் வீட்டிற்குப் போனபோது, அவளுக்கென ஒரு தனியறையும் அதில் கட்டிலும் மெத்தையும் பூப்போட்ட படுக்கை விரிப்பும் அதையெல்லாம் விட ஒரு சின்ன முனகல் கூடக் காட்டாத ஏர்கண்டிஷன் மிஷினும் ஆச்சர்யமாய் இருந்தன. வெளியே வெயில் கட்டெரித்துக் கொண்டிருந்தபோது, அறைக்குள்ளே குளிர், முகத்தைத் தாக்கியது.

சொர்ணலட்சுமி ஒரு திகைப்போடு குமைந்து போனாள். இரவு தூக்கமே வரவில்லை. உள்ளும் புறமும் வெக்கை அதிகமாக இருந்தது. தன் வீட்டின் வறுமை ஒவ்வொன்றாய்ப் புலப்பட ஆரம்பித்தது.

'உலகத்தில் நல்ல விஷயங்கள் தனக்கேன் மறுக்கப்பட்டன...' என்கிற கேள்வி எழுந்தது. தன்னை விட ஏழ்மையானவர்கள் மீது பார்வை போகாமல், எப்போதும் பணக்காரர்களையே பார்க்கும் பார்வை மாறிற்று. பணம் இருப்பவர்களிடம் நடையில், பேச்சில், சிரிப்பில் ஒரு மாற்றம் ஏற்படுவதை அவள் கவனிக்கத் தொடங்கினாள். மிக மிக அதிகமான பணம் இருப்பவர்களிடம், அடக்கம் போலும் ஒரு அலட்டல் இருப்பதைக் கவனித்தாள். அதிகமான பணமும் அடக்கமான அலட்டலும் தனக்கும் வர வேண்டுமென விரும்பினாள்.

ஒரு வருடத்திற்கு முன்பு விதையூன்றப்பட்ட அந்த ஆசை, சிறிய கன்றாய் அவளுள் வளர்ந்திருந்தது. இந்த ஏலக்காய் எஸ்டேட்டும் குளுகுளுவென்ற மலைச்சாரலும் வெள்ளை வெளேர் என்றிருந்த பங்களாவும் ஏலக்காயை சுருக்குவதற்குண்டான சிறிய தொழிற்சாலையும் மிக அழகான சமையலறையும் பள்ளத்தாக்கைப் பார்த்த சிமெண்டு பெஞ்சும் பகவதியின் பீரோவிலிருந்த புடைவை அடுக்குகளும் அவளைக் கிறங்கடித்தன.

'இந்த எஸ்டேட் எனக்குச் சொந்தமாயிட்டா...' ஒரு குழந்தைத்தனமான ஆசை உள்ளுக்குள் ஓடியது.

'பகவதி அக்காவுக்கு இந்த எஸ்டேட் சொந்தம்னா... எனக்கும் சொந்தம்தான்.'

'ஆனா... இது எங்க எஸ்டேட்னு யார்கிட்ட சொல்றது...? பகவதி அக்காக்கிட்டயே சொல்ல முடியுமா...? வேற யார்ட்டயாவதுதான் சொல்லணும்.'

"எங்களுக்கு நாப்பது ஏக்கர் ஏலக்கா எஸ்டேட் இருக்கு." பெரிய ஓடைக்கருகே இருந்த குத்துக்கல்லிடம் சொன்னாள். தனக்குள் முகமில்லாத சிலரை நிறுத்தி வைத்து, அவர்களிடம் அலட்டிக் கொண்டாள்.

சட்டென்று ஒரு



இரவுத் தூக்கத்தில் புரண்டு படுக்கும் போது, ஒரு கேள்வி எழுந்தது.

"இந்த எஸ்டேட்டு பகவதி அக்காதா...? கதிரேசனுதா...?"

'பக்கத்துல இருக்குற ஏலக்கா எஸ்டேட் வாங்கணும்னு கதிரேசன் சொல்லிச்சு. அத விடக் காப்பி எஸ்டேட் வாங்கலாம்னு பகவதி அக்கா சொன்னாங்க. இரண்டையுமே வாங்க ணும்னு கதிரேசன் பேசிச்சு. அப்ப மலையி லேயே இருந்துடறியானு அக்கா கேட்டாங்க. என்ன அர்த்தம் இதுக்கு...? இந்தப் பேச்சு லர்ந்து இது யார் சொத்துனு தெரியல்லியே!'

'இரண்டு பேர்க்கும் சமபங்கு இருக்குமோ?'

'அக்காதா இருந்தா நல்லது. அக்கா செத்த பிறகு இந்த எஸ்டேட் எனக்குத்தான் வரும். அக்காக்குதான் கொழந்த இல்லியே.'

'ச்சே... அக்கா சாவறதப் பத்தி யோசிக் கறேன் பாரு... மடச்சி...'

'மனுஷான்னா சாவு வரத்தானே செய் யும்?'

'இது கதிரேசன்தா இருந்தா...'

'அப்ப சொத்து யாருக்குப் போகும்?'

'அவம் பசங்களுக்கு.'

சொர்ணலட்சுமியின் புத்தி திடுமென்று






"இணைபிரியாக் காதலர்கள்னு சொன்னாலே போதும்பா!"

– கிச்சா

மௌனமாயிற்று. அக்கா செத்து, சொத்து வருவதை விட, கதிரேசனுக்கு உறவானால் சொத்து இன்னும் சட்டமாய் வருமல்லவா...?

'என்ன உறவு?'

'குழந்தை பெற்றுத் தருகிற உறவு. அதாவது மனைவி.' மனசுக்குள் கதிரேசனுக்கு மனைவி யானாள். அந்தக் கனவுகளோடு தூங்கிப் போனாள்.

காலையில் கதிரேசனைப் பார்த்த போதெல்லாம், இரவில் யோசித்த விதங்கள் நினைவுக்கு வந்தன. சிரிப்பைக் கொடுத்தன. அதே நேரம், கதிரேசன் பின்னால் மிகவும் அலைவதாய்க் காட்டிக் கொள்ளக் கூடாது என்பதிலும் கவனம் காட்டினாள். அவன் அறைக்குள் நுழைந்து பழைய துணிகள் தேடிக் கொல்லையில் கொண்டுவந்து போட்டாள். ஒவ்வொரு வேலையிலும் தன்னை யார் கவனிக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொண்டாள்.

துணிகளை வாரிப்போகும் போது, கதிரேசன் விழித்துக் கொண்டான்.

"நீ எதுக்கு என் துணிலாம் வாரிட்டுப் போற...?"

"பகவதி அக்கா சொல்லிச்சு."

"என்ன சொல்லிச்சு?"

"போய் துணி எடுத்துனு வா. தோச்சுப் போட்டுரலாம்னு."

"வாணாம். நானே தோச்சுக்கறேன்."

"நாப்பது ஏக்கர் ஏலக்கா எஸ்டேட் ஓனர். தன் துணியத்தானே தோச்சா நல்லாருக்காது."

அவள் வாரிக் கொண்டு கொல்லைப்புறம் போனாள்.

அவன் தடுப்பதா, வேண்டாமா என்று குழம்பினான். ஆனால் இதையெல்லாம் வேறு யாராவது கவனித்துக் கொண்டால் நல்லது என்றுதான் தோன்றியது. காப்பியும் பிஸ்கட்டும் சாப்பிட்டுவிட்டு, எதிர்ப்பக்கம் உள்ள கட்டடத்துள் நுழைந்தான். பறித்த ஏலத்தை முடித்துக் கொண்டு, இருபது பெண்கள் கையில் தகரத் தூக்குடன் எடை மிஷினுக்கு அருகே நின்றிருந்தார்கள். அவரவர் பறித்த காய்கள், எடை போட்டு பிரித்துக் கொள்ளப் பட்டன. பளபளப்பாய், தடிமனாய், உள்ளே நீர்சதையோடு இருந்த காய்கள், சுருக்கப்பட வேண்டும். உள்ளே வெள்ளையாய் இருக்கிற விதைகள், கருப்பாகும்.

அவன் வேட்டியை மடித்துக் கொண்டு கட்டடத்துள் நுழைந்தான். உலைக்களன் போலப் பெரிய அடுப்பு, கட்டடத்தின் ஓரம் எரிந்து கொண்டிருக்க, அங்கிருந்து ஓரடி அகல அலுமினியக் குழாய், அறை நெடுக ஓடிற்று. இடதும் வலதுமாய் ஒரு ஆள் படுத்துத் தூங்குமளவுக்கு அறை முழுக்க மர செல்ஃப் ஓடியது. நெருப்பின் வெம்மை அலுமினியக் குழாய் வழியாகப் போய், அறை முழுவதும் நல்ல சூடு இருந்தது. தட்டுத் தட்டாய் ஏலக்காய்கள் பரப்பி விடப்பட்டிருந்தன. இருபது மணி நேரமாய் உள்ளே இருந்த ஏலக்காய் முற்றிலும் சுருங்கி இருந்தது. பன்னிரண்டு மணி நேரமாய் வெப்ப அறைக்குள்ளிருந்த ஏலக்காய் பாதி சுருங்கியிருந்தது. அன்று காலையில் பறித்து வந்த ஏலக்காயையும் பரப்பி, உள்ளே டிரேயில் கொண்டு வந்து வைத்தார்கள். இருபது மணி நேரக் காயை அப்படியே எடுத்து வந்து, மெல்லிய கம்பி வலையில் போட்டுத் தேய்த்தார்கள்.

காயிலிருந்த தூசெல்லாம் போய், ஏலக்காய் பளிச்சென்றிருந்தது. அந்த ஏலக்காய்களைச் சல்லடை மூலமாய்த் தரம் பிரித்தார்கள். பொடிசு, சிறுசு, நடுத்தரம், உயர்தரம் என்று பாலிதீன் பையில் போட்டார்கள். பூச்சியும் காற்றும் புகாத தேக்குமரப் பெட்டியில் அடுக்கி வைத்துக் கொண்டார்கள்.

விநாயகம்தான் நாலு பக்கமும் ஓடிக் கொண்டிருந்தான். கட்டடத்திற்கு வெளியே ஓடிப் போய், அடுப்புக்கு கட்டை உடைத்துப் போட்டான். தணல் எழுந்ததும், அறைக்குள் நுழைந்து காய்களைப் பரப்பத் தொடங்கினான். முற்றிலும் சுருங்கிய காய்களை வெளியே கொண்டு வந்து தேய்க்கத் துவங்கினான்.

மிகச் சரியாய்ப் பார்த்து காயை எடுத்து விட வேண்டும். கூட அரை மணி நேரம் வெப்ப அறைக்குள் கிடந்தால் காய் கருகிப் போய்விடும். முன்னதாகவே எடுத்து விட்டால் பச்சைத் தன்மை குறையாது போகும். கம்பி வலையில் தேய்க்கிற போதும், ஒரு பக்குவம் வேண்டும்.

மிகவும் அழுத்தினால் காய், தோலுரிந்து, வாசனையான விதைகள் தரையில் விழுந்து விடும். காய் சுருங்கும் போது மஞ்சளாகி விடக் கூடாது. ரொம்பவும் பச்சை நிறமும் கூடாது. காய் அடிபட்டிருக்கக் கூடாது. ஏலக்காய் ஒரு மாதிரியான காய். பழுப்பு நிறத்தில் விதைகள். ஒரு காயைப் பிதுக்கினால் மூன்று பக்கத்து விதைகள் தென்பட வேண்டும். ஒரு பக்கத்துக்கு ஏழு எட்டு விதைகள் இருப்பது நலம். இதுவே முதல் தரம். இவை போக வேண்டியது ஐரோப்பா அல்லது அரபு தேசம். இந்த முறை முதல்தரக் காய்கள் அதிகம் இருக்குமென்று பகவதி சொன்னான்.

விநாயகம் டிரேயைத் தலையில் வைத்துக்

# திருமுருகா பைனான்ஸ்-ரியல் எஸ்டேட் மற்றும் தொகுப்பு நிறுவனங்கள்

73, ரங்கநாதன் தெரு, வி.கே.கே. டிரேட் சென்டர். (2 வது மாடி) தி.நகர்,
சென்னை - 17. தொலைபேசி; 4347833/6260079



டெபாசிட்களுக்கு ஆண்டு வட்டி **30%** குறைந்தபட்ச டெபாசிட் ரூ.5000/-

36 மாதங்களில் டிபாசிட் இரட்டிப்பாகிறது. குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000/-

உடனடி அன்பளிப்பு; வெள்ளிக்குத்து விளக்கு, எவர்சில்வர் தாம்பூலத் தட்டு

ஒவ்வொரு ரூ.1000/- டெபாசிட்டுக்கும் ஒரு பரிசுக் கூப்பன் வழங்கப்படும்.

24-3-96 அன்று பரிசுக் கூப்பன்களுக்கு குலுக்கல் நடத்தி கீழ்க்கண்ட பரிசுகள் வழங்கப்படும்.

முதல் பரிசு ஒரு மாருதி கார்

2-வது பரிசு வஜ்ஜிரவேல் நகரில் ஒரு வீட்டு மனை

3-வது பரிசு ஒரு கைனெட்டிக் ஹோண்டா ஸ்கூட்டர்

4-வது பரிசு ஒரு கலர் டி.வி.

5-வது பரிசு ஒரு பிரிட்ஜ்

6-வது பரிசு ஒரு மிக்சி

7-வது பரிசு ஒரு ஸ்போர்ட்ஸ் சைக்கிள்

8-வது பரிசு ஒரு பிரஷர் குக்கர்

9-வது பரிசு ஒரு சீலிங் பேன் (மின் விசிறி)

10-வது பரிசு ஒரு வாட்டர் பில்டர்.

முதல் பரிசு



திருவள்ளூரை அடுத்த **கடம்பத்தூரில்** இரயில்வே நிலைய பிளாட்பாரத்தையொட்டி அமைந்துள்ள **வஜ்ஜிரவேல்** நகரில் அங்கீகரிக்கப்பட்ட வீட்டுமனைகளும், **வில்லிவாக்கம்** ரயில் நிலையத்தை அடுத்த சென்னை கார்ப்பரேஷன் எல்லைக்குட்பட்ட **திருமுருகா** நகரில் வீட்டுமனைகள் விற்பனைக்குள்ளன.

**செவ்வாய் விடுமுறை**

KAS INDIA



''முதல்வரும் கவர்னரும் ஒற்றுமையா இருக்கிற மாதிரி படம் எடுத்திங்களே என்ன ஆச்சு?''

''பழைய படம்னு நினைச்சுக்கிட்டு யாரும் தியேட்டர் பக்கமே வரலே!''

- எஸ். எஸ். பூங்கதிர்

கொண்டு ஓடினான்.

"வாங்க" என்று வரவேற்றான்.

"கதவ மூடிடுங்க. குளிர்காத்து உள்ள வந்தா சூடு கொறஞ்சிடும்."

கதவு மூடிய மூன்றாவது நிமிடம் உள்ளே வியர்த்து ஊற்றியது. மூச்சு திணறும்படி ஏலக்காய் நெடி அடித்தது. மிக நுண்ணிய தூசுகள் வெளிச்சத்தினூடே பறந்து கொண்டிருந்தன. கதிரேசனுக்கு அதிக நேரம் அங்கு இருக்க முடியாது என்று தோன்றியது. ஆனால் தடக்கென்று வெளியே ஓடி வந்துவிட்டால் கேலியாகும்.

"மொதலாளி அடுப்புக்கிட்டவே வர மாட்டேங்கறாங்க..." என்ற கேலி வரும். அதேநேரம் அறையின் சூடு திக்குமுக்காட வைத்தது.

விநாயகம் வேகமாய்க் காய்களை கம்பி வலையில் தேய்த்து சுத்தப்படுத்தினான். தூசு கிளப்பினான். கதிரேசன் ஆறேழு முறை தும்முவதைப் பார்த்துச் சிரித்தான். புதிய காய்களைத் தட்டில் பரப்பினான்.

"இங்கையே இருங்க. நா... அடுப்பு கௌரிட்டு வந்துர்றேன்."

கதவு திறந்து, வெளியே போய், கதவு சாத்தினான். அந்தக் கதவு திறந்து கொள்ளாமல் இருப்பதற்காக வெளிப்பக்கம் தாழிட்டான்.

"படவா... வேணும்னே பண்றாம் பார். வெளியப் போய் நெருப்புக் கிளறப் போறான். உள்ள அனல் கக்கப் போவுது. கதவத் தெற, கதவத் தெறனு நான் கத்தணும்னு எதிர்பார்க்கறான்."

மரத்துண்டுகள் வெட்டுகிற சத்தம் கேட்டது. இரும்புக் கழியால் அடுப்பைக் கிளறுகிற ஓசை கேட்டது. உச்சந்தலையிலிருந்து பாதம் வரை, உடம்பு முழுதும் வேர்வை பொங்கி வழிந்தது. நாக்கு வறண்டது. தூசை சுவாசித்து மூச்சுத் திணறல் ஏற்பட்டது. கண்கள் இருண்டன. காதோரம் சிவந்து ரோமம் கருகியது. அறைக்குள் வெப்பத்தைத் தக்க வைப்பதற்காகக் காற்று போக வழியே இல்லாமல் இருந்தது.

கதிரேசன் கவலைப்பட்டான். வேறு வழியில்லை. உஷ்ணம் தாங்க முடியவில்லை. வாய் விட்டுக் கூப்பிட்டு விடலாமா? யோசித்தான். தயங்கினான்.

"உங்களுக்கு ஏன் தம்பி கியூரிங்கு? உங்களுக்கு எதுக்கு அடுக்களை வேலை? நான் பாத்துக்க மாட்டேனா...?" - ஒரு மாதிரி பேச்சு வரும். நாளை மறுபடி இந்தக் கட்டடத்திற்குள் நுழைந்தால், "மொதல்ல வெளியப் போங்க" என்று செல்லமாய் அதட்டல் வரும். அவன் சொந்த இடமே அவனுக்கு அந்நியமாகும்.

நீ இல்லாது போனாலும் நான் வேறு ஆள் வைத்து, நின்று கியூரிங் வேலை செய்வேன் என்று காட்ட வேண்டும். அப்படிக் காட்டுவதற்கு இந்த வெப்ப அனலைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் இந்த வெப்பத்தை இன்னும் அரை நிமிடம்தான் தாங்கலாம்.

அவன் கதவுக்கருகே போன நேரம், தடாலென்று தாழ்ப்பாள் விலகிக் கதவு திறந்தது. சொர்ணலட்சுமி கதவு திறந்தாள். கதிரேசன் வெளியே ஓடிவந்து, குளிர்க்காற்று வாங்கினான். வெப்பத்திலிருந்து குளிருக்கு உடனே மாறியது வேதனையாய் இருந்தது. கடுமையான இருமலும் லேசான மயக்கமும் ஏற்பட்டன.

"ஏன் உங்கள உள்ள வச்சு தாழ்ப்பாள் போட்டுருக்கு?"

"நாந்தான் போடச் சொன்னேன்."

"எதுக்கு...?"

"என்னால உள்ள இருக்க முடியுமான்னு பாக்கறதுக்கு."

"முடியலை போலருக்கே!"

"ஆமாம். முடியல. ஆனா வெளிய சொல்லாதே."

"ஏன்?"

"எனக்கு முடியலைன்னு விநாயகத்துக்குத் தெரிஞ்சா எளக்காரமாப் போயிடும். முதலாளிய ஏமாத்தலாம்னு தோணும்."

"நீங்கதான் எஸ்டேட்டுக்கு மொதலாளியா? அக்கா இல்லியா?"

"இது என்னுது. என் நிலம். இந்த நாப்பத எண்பதா மாத்தத்தான் இங்க வந்துருக்கேன்" நன்றாய் இழுத்துக் குளிர்காற்றை சுவாசித்தான்.

"எட்டிப் பாரு. விநாயகம் வர்றானா?"

"ஆமாம்!"

"நான் உள்ளப் போறேன். கதவத் தாழ்ப்பாள் போட்டுரு. நான் உள்ளருக்குறது தெரியாத மாதிரி, யார்னா உள்ளருக்கீங்களானு கூப்பிடு. என்னத் தேடி வந்ததா சொல்லு."

அவன் தடக்கென்று உள்ளே நுழைந்து கொண்டான். அவள் சப்தம் வராமல் தாழிட்டாள்.

"விநாயகம்... மொதலாளியப் பாத்தியா?" என்று வெகுளியாய்க் கேட்டாள்.

அவள் உதவிய விதம், உள்ளேயிருந்த கதிரேசனுக்கு மிகவும் பிடித்தது.

(தொடரும்)

# சலனம்

**தமயந்தி**

ஆபீஸ் விட பத்து நிமிஷமிருக்கும். அக்கவுண்ட் செக்ஷன் பாலாமணி கூப்பிட்டாள்.

"காயத்ரி... ரகோத்தமன் வந்திருக்கார்."

ரகுவா.. எதற்கு? இன்னும் நிச்சயதார்த்தத்துக்கு நாலே நாள் இருக்கும் நிலையில்.. ஏதும் தகராறு செய்வானா? உடல் ஒருமுறை நடுங்கியது.

"ஏதும் சொன்னாரா பாலா?"

"உன்னைப் பார்க்கணுமாம்."

எழுந்து வெளியே வந்தாள். காரிடரில் இருந்த பெஞ்சில் ரகோத்தமன் உட்கார்ந்திருந்தது தூரத்திலிருந்தே தெரிந்தது. பளிங்கு மாதிரியொரு முகம். அவன் பெண் பார்க்க வரும்போது அந்த முகம்தான் மனசில் படர்ந்தது. அவன் மனசு அவ்வளவு பளிங்கில்லை என்று கல்யாணமான நாலாம் நாளே புரிந்து போனது. மிட்டி பிறந்த பிறகு சின்ன விஷயங்களுக்கெல்லாம் சச்சரவு முளைத்தது. சின்ன விஷயத்துக்கும்... அவன் ஷர்ட்டில் பட்டன் பிய்ந்து போனதற்கும்...

"என்னடி பண்றே. ஷர்ட்ல பட்டன் பிஞ்சிருக்கு பாத்தியா?"

அவன் குரலை ஓங்கின விதம் இவளையும் ஓங்க வைத்தது.

"ஏன் ஒருநாள் தச்சு போட்டுக்கிட்டா தான் என்ன? ஒழிஞ்சா போயிரும்?"

"ஆமா. ஒழிஞ்சிரும். உன்னோட எல்லாம் ஒழிஞ்சிது."

சட்டையைத் தூக்கி எறிந்தான். மிட்டி கலங்கலாய்ப் பார்த்தது. அவளைப் புறப்பட வைத்து, க்ரெஷில் விட வேண்டும். விடும்போது கழுத்தைக் கட்டிக் கொண்டு "ம்மா..." என்பாள். கண்ணில் நீர் நிறைந்திருக்கும். அந்தக்கணம், அந்த வேலையை விட்டு விடலாமா என்று தோன்றும். ரகோத்தமன் விடமாட்டான். உயிரே போனாலும் அவனுக்கு முதல் தேதி சம்பளம் முக்கியம்.

இத்தனைக்கும் மேல் ரகோத்தமனிடம் சில நல்ல விஷயங்களும் இருந்தன. பெண் குழந்தை என்றவுடனே முகம் தூக்கும் மனுஷரிடையே பெண் சிசு வேண்டும் என்று வேண்டிக் கொள்ளும் மனசிருந்தது. மிட்டி பிறந்ததும் ஒரு மாசம் லீவ் போட்டு ஊருக்கு வந்தான். வாரி வாரி விளையாட்டுப் பொருட்கள் வாங்கினான்.

"என்ன சீதனமே சேத்துருவே போல?" ரகுவின் அம்மா கிண்டலடிப்பாள்.

"சேத்தா என்ன? என் பிள்ளைம்மா."

மிட்டியும் அவனிடம் ஒட்டிக் கொண்டதில் ஆச்சர்யமில்லை. அந்த ஒட்டுதலினால்தான் அவனிடமிருந்து பிரிந்த போது பாதிப்பு இருந்தது.

ரகோத்தமனிடமிருந்து ஒரு வருடம் பிரிந்திருந்தால்தான் விவாகரத்து கிடைக்கும் என்றவுடன் காயத்ரி அம்மா வீட்டுக்கு வந்தாள். தாம்பரத்திலிருந்து தினமும் சென்னைக்குப் போனாள். மௌண்ட்ரோடில் பாங்க். வேலை முடிந்து வீடு வர ஏழரை, எட்டாகி விடும்.

"மிட்டி சாப்பிடவே இல்ல காயத்ரி."

உற்சாகமற்று மூலையில் ஒண்டியிருப்பாள். காயத்ரி பக்கத்தில் போய் தலையில் கை வைத்ததும் கருண்டு கொள்வாள்.

"ஏண்டா சாப்டலை?"

"அப்பா வேணும்மா."

"வருவார். சாப்பிடு, வருவார்."

"பொய். நீ இனிமே அப்பாட்ட கூட்டிட்டுப் போக மாட்டே. நீ பிரிஞ்சிட்டே."

"அதுக்காக சாப்பிடாமலேயே இருக்கப் போறியா?"

"பசிக்கலை."

மிட்டியை தூங்க வைத்தபின் அப்பா அறைக்கு வந்தார்.

"காயத்ரி... சொல்றேன்னு தப்பா நினைக்காதே. மிட்டி ரகுவைத் தேடுறாம்மா."

"தெரியுதுப்பா. அவனை நல்லா வச்சிருப்பாரில்லையா?"

"அவளுக்காகவாவது நீ உன் முடிவை மாத்திக்கலாம் இல்லியா?"

"தினமும் சண்டை, கோபம்,

சச்சரவு... இப்படியொரு சூழல்ல அவ வாழ்வதை விட சாப்டாத வாழறது நல்லதுப்பா."

"உன் இஷ்டம் காயத்ரி."

"உங்களுக்குப் புரியலையாப்பா?"

அப்பாவுக்குத் தெரியும். நடுநிசியில் வீட்டை விட்டு கோபத்தில் ரகோத்தமன் தள்ளினது. பெரியவர்கள் பேசியும் அவன் மசியவில்லை. காயத்ரியை மன்னிப்பு கேட்கச் சொன்னான். காயத்ரி பிடிவாதமாய் மறுத்து, லாயர் நோட்டீஸ் அனுப்பினாள். அதற்கப்புறம் பதிலுக்கு அவன் நோட்டீஸ் அனுப்ப கோர்ட் வாசலில் பிரிந்தார்கள்.

அதற்குப் பிறகு அவனைப் பார்க்கவில்லை. பார்க்கும் சந்தர்ப்பத்தை தந்து விடாதே என்று தினமும் வேண்டினாள். மிட்டிக்கு மட்டும் தகப்பனின் உறவு அழுத்தினது துல்லியமாகத் தெரிந்தது.

"ம்மா... ப்ராக்ரஸ் கார்டில் எல்லாருக்கும் அப்பா கையெழுத்து போடுறாம்மா."

"ம்..."

"வாட்ஸ் யுவர் ஃபாதர்ங்கிறா மிஸ். என்ன சொல்றது?"

அம்மா மௌனமாக அழுவாள். அப்பா யோசித்தார்.

"காயத்ரி... நீ ஏதாவது செய்யணும். உனக்கும் எங்க காலத்துக்கப்புறம் ஒரு துணை வேணும். கடைசி காலத்துல ஒரு தலைவலினா தைலம் வாங்கவாவது ஆள் வேணும். எல்லாத்துக்கும் மேலா, மிட்டிக்கு ஒரு தகப்பன்..."

"என்ன சொல்றீங்கப்பா?"

"மேட்ரிமோனியல்ல கொடுக்கட்டா?"

"உங்க இஷ்டம்!"

எழுதிப் போட்டார். பதிலுக்கு ஏழு வரன்கள் வந்தன. 'எனக்கு இரண்டு குழந்தைகள். வயது நாற்பத்தியொன்று. ஜி.ஹெச்.சில் பார்மசிஸ்ட் வேலை...' என்று வந்த ஜாதகம் அப்பாவைக் கவர்ந்தது.

"என்னம்மா சொல்றே?"

"குழப்பமா இருக்குப்பா."

"தீர்மானிச்சப் பிறகு குழம்பக் கூடாது காயத்ரி."

"உங்க இஷ்டம்ப்பா."

"போட்டோ பார்க்கவில்லை. யாரானால் என்ன? மிட்டிக்கு ஓர் அப்பா. அவ்வளவுதான். அவ்வளவுதானா? உனக்கு புருஷனில்லையா? ஏனோ மனசு நடுங்கிற்று. மிட்டியையும் தன் பிள்ளை போல் உறவாடுவானா? ரகோத்தமன் மாதிரி...

என்ன நினைப்பு இது? வேண்டாம் என்று விலகி வந்தவனைப் போல் இவனும் இருக்க வேண்டும் என்று நினைப்பதில் என்ன நியாயம்?

"நீ பேசணுமா காயத்ரி?"

"வேணாம்பா."

"பேசிக்கலையேன்னு வருத்தப்படக் கூடாதும்மா பிறகு?"

பேசினால் என்ன பேச... "மிட்டியை உன் குழந்தையைப் போல பார்த்துக் கொள்வாயா?"

அவன் நிச்சயம் சரி என்று தான் தலையாட்டுவான். நீ என் குழந்தைகளுக்கு நல்ல தாயாய் இருப்பாயா என்று கேட்பான். சரி என்று தலையாட்ட வேண்டும். என்ன தலையாட்டினாலும் கல்யாணத்துக்குப் பிறகே விஸ்வரூபம் தெரியும்.

"அடுத்த வெள்ளி வர்றாங்களாம். சின்னதா நமக்குள்ளேயே நிச்சயம் பண்ணிக்க."

அம்மா ஆபீஸ் விட்டுப் போனதும் சொன்னாள்.

"மிட்டிகிட்ட சொல்லிட்டியா?"

"சொல்லணும். நாளைக்குள்ள சொல்லிர்றேன். சந்தோஷப்படுவாள்."

படுவாளா? தெரியவில்லை. ஏன் எனக்கே எந்த உணர்ச்சியும் இல்லையே.

இந்த படபடப்புக்குள் ரகோத்தமன் ஏன் வர வேண்டும்? எதற்காக?

"எப்படிருக்க... எப்படிருக்கீங்க?"

ரகோத்தமன் வார்த்தைகளைத் தேடித் திணறினான். இன்னும் அந்தப் பளிங்கு முகம் அப்படியே இருந்தது ஆச்சர்யமாய் இருந்தது. அவனுக்கென்ன? என்னைப் போல இன்னொருத்தியை கல்யாணம் பண்ணியிருப்பான். ஏதாவது சொத்தில் பிரச்னை இருக்கும். கையெழுத்து ஏதாவது தேவையாயிருக்கும். வந்திருப்பான்.

"மிட்டி எப்படிருக்கா?"

உன்னை அதிகம் தேடுகிறாள் என்று சொன்னால் எனக்குத் தோல்வி.

"நல்லாருக்கா."

"பர்ஸ்டா செகண்டா படிக்கிறா?"

"பர்ஸ்ட். என்ன விஷயம்?"

அப்படி படாரென்று கேட்டிருக்கக் கூடாதோ என்று தோன்றிற்று. வேறு வழியில்லை. அவன் பேசுவதைப் பார்த்தால் பாய வந்திருப்பது போல் தெரியவில்லை.

"வந்து... எப்படி ஆரம்பிக்கன்னு தெரியலை."

"சொல்லுங்க."

"உங்களுக்கு கல்யாணம்னு..."



















உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை : எஸ்டி அசோசியேடட் பில்டர்ஸ். சென்னை நகரில் டீலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்க, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.




**YESDE ASSOCIATED BUILDERS LIMITED**

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/ 4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333

"யார் சொன்னா?"

"கேசவமூர்த்தி. என் ப்ரெண்ட்தான். தற்செயலா ஃபோட்டோ காட்டினான்."

"ஓ!"

"கல்யாணம் ஒழுங்கானதில சந்தோஷம். ஆனா..."

"என்ன?"

"மிட்டி.. அவனை கேசவமூர்த்தி..."

"நல்லா வச்சுப்பார்."

"இல்ல காயத்ரி. மாமா அத்தைட்ட விட்டுறணும் கொஞ்ச நாள்லனான். அதான் எங்கிட்டயே வளரட்டும்னு.."

காயத்ரி அதிர்ந்தாள். நிஜமாகத்தான் சொல்கிறானா?



"நாம இரண்டு பேரும் இருந்தும் அவ அனாதையா ஆயிடக் கூடாது காயத்ரி. நீ கல்யாணம் பண்ணிக்க. எனக்கு ஆட்சேபணை இல்ல. ஆனா மிட்டி அனாதையாயிடக் கூடாது."

"நான் நம்பலை."

"நான் பொய் சொல்லலை காயத்ரி. நம்பணும். மிட்டிக்காக..."

"....."

"மிட்டிக்காக நாம அப்பமே வீணா விளையாடின நாக்கை கடிவாளம் போட்டிருக்கலாம் காயத்ரி. தப்பு பண்ணிட்டோம்."

"யோசிக்கணும்."

"யோசிங்க. 7870021. எப்பனாலும் ஃபோன் பண்ணுங்க."

அவன் சடாரென்று திரும்பி நடந்தான். இவன் சொல்வதும் உண்மையாய் இருக்குமா? கல்யாணத்துக்குப் பிறகு மிட்டி உன் அம்மா அப்பாவிடமே இருக்கட்டும் என்று விட்டால்... திரும்பவும் விவாகரத்தா? விவாகரத்து என்ன விளையாட்டில் ஃபவுல் கேம் மாதிரியா?"

**வீ**ட்டுக்குப் போன போது அம்மா அமைதியாய் கேசரியை நீட்டினாள்.

"மிட்டி எங்கம்மா?"

"விஷயம் சொன்னேன். அழுதா. ரூம்ல படுத்துருக்கா."

கேசரியைக் கீழே வைத்து விட்டு படுக்கையறைக்குப் போனாள். எத்தனை போராட்டம் இவளுக்குள்? ரகு சொன்னது போல் இவளுக்காகவாவது நாக்குக்கு கடிவாளம் போட்டிருக்கலாம்.

கதவைத் திறந்தாள். மிட்டி கையில் எதையோ மடக்கி வைத்து படுத்திருந்தாள்.

"மிட்டி"

கூப்பிட்டதும் சட்டென்று தலையணை உறைக்குள் அதை மறைத்தாள். சட்டென்று பற்றி அதை இழுக்க -

மிட்டியின் முதல் பிறந்த நாளில் ரகு, காயத்ரி, மிட்டி நின்றபடி எடுத்த ஃபோட்டோ. எத்தனை சந்தோஷமான மிட்டியின் முகம்.

"ம்மா..."

மிட்டி கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதாள். காயத்ரி ரகோத்தமனின் ஃபோன் நம்பரை நினைவு படுத்திக் கொண்டே சொன்னாள்.

"அழாத மிட்டி. அதுக்கென்ன? இதே மாதிரி ஒரு ஃபோட்டோவை நாளைக்கே எடுத்துறலாமா?"

மிட்டி சிரித்த போது ரகுவின் நிழல் எங்கேயோ அவள் முகத்தில் படர்ந்தாற் போலிருந்தது.

# மல்லிகைப் பூ

## காலம் இது

மல்லிகைப் பூ புனிதத் தனமை தந்து சமநிலையும் அளிக்கும் நறுமணத்தை முகர்வது அவசியம். இதனால் பூமியில் மறைந்து உள்ள அதன் சாரம் இரகசிய உண்மை நாம் கிரகித்துக் கொள்ள முடிகிறது.

—சிவமஹா புராணம்

---

மல்லிகைப் பூவினால் அர்ச்சனை செய்தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

மலர்களை மாலைகளாக தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்வது மலர்களால் அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற மடங்கு பலன் தரும். ஒருவன் தன் சொந்த தோட்டத்திலிருந்து மலர்களை வந்து பகவானுக்கு அர்ப்பணித்தால் அடையும் பலன்களைவிட காட்டிலிருந்து சேகரித்த பூக்களால் அர்ச்சிப்பது மும்மடங்கு பலனைக் காட்டும்.

அக்னிப் புராணம்

---

# பார்த்திபன் கனவு

## 34. "ஆகா! இதென்ன?"

விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மீது தாவி ஏறிக் கொண்டார்கள்.

"பொன்னா! முண்டாசு கட்டி மீசை வைத்துக் கொண்டிருந்த வண்டிக்காரன் யார்? நீதானே!" என்று குதிரைகள் போய்க் கொண்டிருக்கும்போதே விக்கிரமன் கேட்டான்.

"ஆமாம், மகாராஜா!"

"சிறைக்குள்ளிருந்தபோது நீ என்னை மறந்து விட்டாயாக்கும் என்று நினைத்தேன்."

"நான் ஒருவேளை மறந்தாலும், என்னை மறக்க விடாதவர் ஒருவர் இருக்கிறாரே!"

"யார் அது?"

"வேறு யார்? தங்களை யமன் வாயிலிருந்து மீட்ட தேவிதான்."

இதைக் கேட்டதும் விக்கிரமனுடைய உள்ளம் மகிழ்ச்சியினால் துள்ளிற்று. குந்தவியைப் பற்றி மேலும் விசாரிக்க வேண்டுமென்கிற ஆவல் உண்டாயிற்று. ஆனால் சிறிது தயக்கமாகவுமிருந்தது.

சற்றுப் பொறுத்து, "எங்கே போகிறோம் இப்போது?" என்றான் விக்கிரமன்.

"மாமல்லபுரத்துக்கு, மகாராஜா!"

"பொன்னா!"

"என்ன, மகாராஜா?"

"நாளைக் காலைக்குள் மாமல்லபுரம் போய் விட வேண்டும்."

"ஆமாம், மகாராஜா! அதனால்தான் ஒரு கணம் கூடத் தாமதிப்பதற்கில்லை என்று நான் சொன்னேன்."

"நாளை மத்தியானம் வரையில் அங்கே கப்பல் காத்துக் கொண்டிருக்கும்."

"அதற்குள் நாம் போய் விடலாம், மகாராஜா!"

விக்கிரமன் சற்றுப் பொறுத்து மறுபடியும், "தேவி எங்கே இருக்கிறார், பொன்னா! அவரிடம் கடைசியாக ஒரு தடவை விடை பெற்றுக் கொண்டு கிளம்பியிருந்தால், எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும்!" என்றான்.

"அது முடியாது, மகாராஜா!"

"எது முடியாது?"

"தேவியிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்புவது."

"ஆமாம்; முடியாதுதான்! இனி உறையூருக்கு மறுபடியும் எப்படிப் போக முடியும்?"

"தேவி உறையூரில் இல்லை, மகாராஜா!"

"தேவி உறையூரில் இல்லையா? பின் எங்கே?"

"மாமல்லபுரத்தில்!"

"ஆ!" என்றான் விக்கிரமன். சில நாட்களாகச் சிறைப்பட்டிருந்த பிறகு விடுதலையடைந்த உற்சாகம், குளிர்ந்த இரவு நேரத்தில் குதிரை மீது செல்லும் கிளர்ச்சி, இவற்றுடன், 'குந்தவி மாமல்லபுரத்தில் இருக்கிறாள்' என்னும் செய்தியும் சேர்ந்து அவனுக்கு எங்கேயோ ஆகாயத்தில் பறப்பது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று.

"அப்படியானால் அவரிடம் விடைபெற முடியாது என்று சொன்னாயே, ஏன்? பொன்னா! ஒருகண நேரமாவது அவரை நான் அவசியம் பார்க்க வேண்டும். பார்த்து நன்றி செலுத்த வேண்டும். அதோடு என் தாயாரைக் கண்டுபிடித்துப் பாதுகாக்கும் பொறுப்பையும் அவரிடம் ஒப்புவிக்க வேண்டும்."

**அமரர் கல்கி**

"அதுதான் முடியாது!" என்றான் பொன்னன்.

"ஏன் அவ்வளவு உறுதியாகச் சொல்லுகிறாய்?"

"தேவியின் உறுதி எனக்கும் தெரிந்திருப்பதினாலே தான். தங்களுக்கு விடை கொடுத்து அனுப்பும் உத்தேசம் அவருக்குக் கிடையாது. தங்களோடு அவரும் புறப்படச் சித்தமாயிருக்கிறார்."

"ஆகா! நிஜமாகவா? - இவ்வளவு முக்கியமான செய்தியை முன்னமே எனக்கு ஏன் சொல்லவில்லை?"

"இப்போது கூட நான் சொல்லியிருக்கக் கூடாது. தாங்கள் கப்பல் ஏறிய பிறகு தங்களை அதிசயப்படுத்த வேண்டும் என்று தேவி உத்தேசித்திருந்தார். அவசரப்பட்டுச் சொல்லி விட்டேன்."

விக்கிரமன் சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். திடீரென்று, "அதோ பாருங்கள் மகாராஜா!" என்று பொன்னன் கூறியதும் விக்கிரமன் சிறிது திடுக்கிட்டுப் பார்த்தான். சாலையில் ஒரு பக்கத்து மரத்தடியில் பத்துப் பன்னிரண்டு பேர் கும்பலாக நின்றார்கள். அவர்களில் ஒருவன் தீவர்த்தி வைத்துக் கொண்டிருந்தான். தீவர்த்தி வெளிச்சத்தில் அவர்களுடைய உருவங்கள் கோரமாகக் காட்சி அளித்தன. அவர்களுடைய கழுத்தில் கபால மாலைகள் தொங்கின. அவர்களுடைய கைகளில் கத்திகள் மின்னின. நெற்றியில் செஞ்சந்தனமும் குங்குமமும் அப்பிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் நின்ற இடத்தைக் குதிரைகள் தாண்டிய போது ஒரு கணம் விக்கிரமனுக்கு உடம்பு நடுங்கிற்று. அவர்களைக் கடந்து சிறிது தூரம் சென்றதும், "அப்பா! என்ன கோரம்?" என்றான் விக்கிரமன்.

"மகாராஜா! தங்களுக்காகத்தான் இங்கே இவர்கள் காத்திருக்கிறார்கள். இவர்களிடம் தங்களை ஒப்புவித்து விடும்படிதான் மாரப்பபூபதி கடைசியாகத் தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டார். நான் இவர்களை முந்திக் கொண்டேன். தாங்கள் குதிரை மேல் இவ்விதம் தனியாகப் போவீர்கள் என்று இவர்கள் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். இன்னும் ரொம்ப நேரம் காத்திருப்பார்கள். பிறகு கபால பைரவரிடம் போய்த் தாங்கள் வரவில்லையென்று தெரிவிப்பார்கள். இன்று கபால பைரவருக்கு மாரப்ப பூபதி மேல் பிரமாதமான கோபம் வரப் போகிறது!". என்றான் பொன்னன்.

"பொன்னா! சக்கரவர்த்தியின் சிரஸாக்கினை, கபாலிகர்கள் பலி - இந்த இரண்டு வித ஆபத்துகளிலிருந்து மல்லவா என்னை நீ தப்புவித்திருக்கிறாய்? முன்னே காட்டாற்றில் போனவனை எடுத்து உயிர் கொடுத்துக் காப்பாற்றினாய். சோழ வம்சத்தின் குல தெய்வம் உண்மையில் நீதான். உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? நாளைய தினம் உன்னை விட்டுப் பிரிவேன். மறுபடியும் எப்போது காண்பேனோ, என்னவோ?"

"லட்சணந்தான்!" என்றான் பொன்னன்.

"என்ன சொல்கிறாய்?"

"என்னைவிட்டாவது தாங்கள் பிரியவாவது?"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

"இன்னொரு தடவை தங்களைக் கப்பலில் அனுப்பி விட்டு நான் இங்கே இருப்பேன் என்று நினைக்கிறீர்களா? இங்கே எனக்கு என்ன வேலை? வள்ளி ஏற்கெனவே குந்தவி தேவியுடன் மாமல்லபுரத்தில் இருக்கிறாள். நானும் அவளும் தங்களுடன் வரப் போகிறோம்."

விக்கிரமன் சற்று மௌனமாயிருந்து விட்டு, "பொன்னா! நீ சொல்வது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியளிக்கிறது. நீயும் வள்ளியும் என்னுடன் வந்தால், சோழ நாடே வருகிற மாதிரிதான். ஆனால், ஒரு விஷயந்தான் என் மனத்தை வருத்திக்



கொண்டிருக்கிறது. மகாராணியின் கதி என்ன? அவரை யார் தேடிக் கண்டுபிடிப்பார்கள்? அவருக்கு யார் என்னைப் பற்றிச் சொல்வார்கள்? - நான் தாய்நாட்டுக்கு வந்ததின் முக்கிய நோக்கம் மகாராணியைப் பார்ப்பதற்கு. அவரைப் பார்க்காமலே திரும்பிப் போகிறேன். அவருக்கு என்னைப் பற்றிச் செய்தி சொல்லவாவது யாரேனும் இருக்க வேண்டாமா!" என்றான்.

பொன்னனுடைய மனத்திலும் அந்த விஷயம் உறுத்திக் கொண்டிருந்தது. சிவனடியாரிடம் தான் சொன்னபடி ஒன்றுமே செய்யவில்லை. அவர் என்ன ஆனாரோ, என்னவோ? மகாராணியை ஒருவேளை கண்டு பிடித்திருப்பாரோ?

பொன்னனுடைய மனத்தில் சமாதானம் இல்லாவிட்டாலும், வெளிப்படையாக, "மகாராணியைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம் மகாராஜா! அவரைச் சிவனடியார் பாதுகாப்பார். சிவனடியாரால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. மகாசக்தி வாய்ந்தவர்" என்றான்.

"ஆமாம்; அவர் நம்மை மாமல்லபுரத்துக்கருகிலுள்ள சிற்ப வீட்டில் சந்திப்பதாகச் சொன்னாரல்லவா?"

"அது இப்போது முடியாத காரியம். சிவனடியாரைப் பார்க்கத் தங்கினோமானால், கப்பலைப் பிடிக்க முடியாது."

"உண்மைதான். ஆனாலும் அன்னையையும் சிவனடியாரையும் பார்க்காமல் போவதுதான் மனத்திற்கு வேதனை அளிக்கிறது" என்றான் விக்கிரமன்.

அப்போது "ஆகா! இதென்ன?" என்று வியப்புடன் கூவினான் பொன்னன்.

இதற்குள் அவர்கள் காட்டாற்றைச் சமீபித்து அதன் இக்கரையிலுள்ள மகேந்திர மண்டபத்துக்கருகில் வந்து விட்டார்கள். அந்த மண்டபத்தின் வாசலில் தோன்றிய காட்சிதான் பொன்னனை அவ்விதம் வியந்து கூவச் செய்தது. அங்கே ஏழெட்டு ஆட்கள் ஆயுதபாணிகளாக நின்றார்கள். இரண்டு பேர் கையில் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தார்கள். மண்டபத்தின் வாசல் ஓரமாக ஒரு பல்லக்கு வைக்கப்பட்டிருந்தது.

"இன்று ராத்திரி என்னவெல்லாமோ ஆச்சரிய சம்பவங்கள் நடைபெறுகின்றன!" என்று பொன்னன் முணுமுணுத்தான்.

"இந்த வேளையில் இங்கே யார், பொன்னா?" என்றான் விக்கிரமன்.

"தெரியவில்லை, மகாராஜா!"

"இவர்கள் கபாலிகர்கள் இல்லை, நிச்சயம். வேறு யாராயிருக்கலாம்?"

"ஒருவேளை குந்தவி தேவிதான் நமக்கு உதவிக்காக இன்னும் சில ஆட்களை அனுப்பியிருக்கிறாரோ, என்னவோ? ஆனால் பல்லக்கு என்னத்திற்கு?"

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே மகேந்திர மண்டபத்தின் வாசல்





## அருள் வாக்கு

**உடம்புக்கு மட்டும்தான் மூச்சு முக்கியம் என்றில்லை, மனஸுக்கும் மனஸின் ஆரோக்யத்திற்கும் அதுவே முக்யமாயிருக்கிறது. எண்ணங்களுக்கு மூலமான மனஸும், மூச்சுக்கு மூலமான பிராணசக்தியும் ஒன்றாகவே இருப்பதால்தான் இப்படியிருக்கிறது. நாடி சலனத்தாலேயே ஆரோக்யமான (நல்ல) அல்லது ஆரோக்யக்குறைவான (கெட்ட) எண்ணங்களும் உண்டாகின்றன. நீங்களே கவனித்துப் பார்த்தால் தெரியும். ஒரு தெய்வ ஸந்நிதானத்தில் அல்லது மஹானின் அருகில் மனஸ் சாந்தமாக இருக்கிறபோது மூச்சு எப்படி சஞ்சரிக்கிறது; காமத்தினால், கோபத்தினால் வேகம் உண்டாகிறபோது சுவாஸகதி எப்படியிருக்கிறது என்று பார்த்தால், ஒன்றுக்கொன்று நிரம்ப வித்தியாஸமாயிருக்கும். ஸந்தோஷம் என்பதிலேயே கூட தெய்வ விஷயமாக ஒரு பஜனையில் அல்லது உத்ஸவத்தில் உண்டாகிறதற்கும், இந்திரிய ஸுகத்தைத் தருகிற விஷயங்களில் உண்டாவதற்கும் நாடி சலனத்தில் வித்யாஸம் தெரியும். பொதுவாக உத்தமமான ஸந்தோஷத்தில் மூச்சு வலது நாசித் துவாரத்தில் வரும்; வெறும் இந்திரிய ஸந்தோஷம் (புலனின்பம்) என்றால் இடது நாசித்துவாரத்தில் வரும். இத்தனை உணர்ச்சிகளுக்கும் ஆதாரமான, சாந்தமான ஸத்வஸ்துவில் தியானம் வலுவாகிறபோது, ஒரே சீராக, மிக மெதுவாக, இரு நாசிகளிலும் ஸமமாக மூச்சு வரும். தியான லக்ஷ்யத்தில் ஒன்றுபட்டு விடுகிறபோது மூச்சே நின்றுவிடும். மனஸும் நின்றுவிடும். ஆனால் உயிர் இருக்கும்; ஞானம் என்ற பேருணர்வு பூரித்து இருக்கும்.**

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வந்து விட்டது. குதிரைகளை இருவரும் நிறுத்தினார்கள். அங்கு நின்ற ஆட்களில் ஒருவனை எங்கேயோ பார்த்ததாகப் பொன்னனுக்கு நினைவு வந்தது. எங்கே பார்த்திருக்கிறோம்?- ஆகா! திருச்செங்காட்டாங்குடியில்! பரஞ்சோதி அடிகளின் ஆள் குமரப்பன் இவன்.

அந்த மனிதனும் பொன்னன் முகத்தைப் பார்த்து அடையாளம் தெரிந்து கொண்டான்.

"ஓ! பொன்னனா?" என்று அவன் ஆச்சரியத்துடன் கூறி, "பொன்னா! சமாசாரம் தெரியுமா? உறையூர் மகாராணி அகப்பட்டு விட்டார்! இதோ இந்த மண்டபத்துக்குள்ளே இருக்கிறார். உன்னைப் பற்றிக் கூட விசாரித்தார்" என்றான்.

## 35. தாயும் மகனும்

"மகாராணி அகப்பட்டு விட்டார்" என்ற வார்த்தைகளைக் கேட்டதும் விக்கிரமனுக்கும் பொன்னனுக்கும் உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிற்று. இருவரும் குதிரை மேலிருந்து கீழே குதித்தார்கள்.

அப்போது உள்ளேயிருந்து, "குமரப்பா! யார் அங்கே? பொன்னன் குரல் மாதிரி இருக்கிறதே!" என்று ஒரு பேச்சுக் குரல் கேட்டது. அது மகாராணி அருள்மொழி தேவியின் குரல்.

"அம்மா!" என்று அலறிக் கொண்டு விக்கிரமன் மகேந்திர மண்டபத்துக்குள் நுழைந்தான். பொன்னனும் பின்னோடு சென்றான்.

அப்போது அந்த இருளடைந்த மண்டபத்துக்குள்ளேயிருந்து ஒரு பெண் உருவம் வெளியே வந்தது. அது அருள்மொழி ராணியின் உருவந்தான். ஆனால், எவ்வளவு மாறுதல்? விக்கிரமன் கடைசியாக அவரைப் பார்த்தபோது இன்னும் யௌவனத்தின் சோபை அவரை விட்டுப் போகவில்லை. இப்போதோ முதுமைப் பருவம் அவரை வந்தடைந்து விட்டது. மூன்று வருஷத்துக்குள் முப்பது வயது அதிகமானவராகக் காணப்பட்டார்.

விக்கிரமன் ஒரே தாவலில் அவரை அடைந்து சாஷ்டாங்கமாய்க் கீழே விழுந்து அவருடைய பாதங்களைப் பற்றிக் கொண்டான். அருள்மொழிராணி கீழே உட்கார்ந்து விக்கிரமனுடைய தலையைத் தூக்கித் தன் மடி மீது வைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

விக்கிரமனைப் பின்தொடர்ந்து மண்டபத்துக்குள் நுழைந்த பொன்னன் மேற்படி

# மெட்ராஸ் மசாலா!

இட ஒதுக்கீடு எல்லாம் மொஃபசல்காரர்களுக்குத்தானா என்று சென்னைவாசிகள் பாய ஆரம்பித்துவிட்டார்கள். ஆகவே, அடுத்து சிறப்புப் பக்கங்களைக் குத்தகை எடுக்கப் போவது சென்னை வாசிகள்!

கதையோ, கவிதையோ, ஜோக்கோ, துணுக்கோ — புகுந்து விளையாடுங்கள் — போஸ்ட் கார்டில் மட்டும்!

சுவாரஸ்யமான, 'வாவ்' என்று வாய் பிளக்க வைக்கும் 'மெட்ராஸ் மசாலா'க்கள் அதிகபட்சம் நான்கு வாரத்திற்கு கல்கி சிறப்புப் பக்கங்களில் இடம் பெறும். பிரசுமாகும் துணுக்குகளுக்குச் சன்மானமும் சிறந்த ஒன்றுக்கு ரூ. 100/- சிறப்புப் பரிசும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

போஸ்ட் கார்டின் முகவரிப் பகுதியில், **'மெட்ராஸ் மசாலா'** என்று மறக்காமல் குறிப்பிடுங்கள்.

— ஆசிரியர்.

காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். தற்செயலாக அவனுடைய பார்வை மண்டபத்தின் ஒரு பக்கத்தில் கட்டுண்டு கிடந்த உருவத்தின் மேல் விழுந்தது; மங்கலான தீவர்த்தியின் வெளிச்சத்தில் அது குள்ளனுடைய உருவம் என்பதைப் பொன்னன் கண்டான்.

பொன்னனுடைய பார்வை குள்ளன் மீது விழுந்ததும் குள்ளன், "ஹீஹீஹீ" என்று சிரித்தான்.

அந்தச் சிரிப்பைக் கேட்டு விக்கிரமனும் அவனைப் பார்த்தான். திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து, "பொன்னா!" என்றான்.

"ஆம், மகாராஜா! மாமல்லபுரத்திலிருந்து தங்களுக்கு வழிகாட்டி வந்த சித்திரக்குள்ளன் தான் இவன்!" என்றான்.

குள்ளன் மறுபடியும் "ஹீஹீஹீ" என்று சிரித்தான்.

அருள்மொழி ராணி எல்லோரையும் மாறி மாறிப் பார்த்தாள். யாரை என்ன கேட்பது என்று தெரியாமல் திகைப்பவளாகக் காணப்பட்டாள். கடைசியில் "பொன்னனைப் பார்த்து, பொன்னா எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டது போலிருக்கிறது. அந்த மலைக் குகையில் எத்தனை நாள் இருந்தேன் என்பதே தெரியாது. கடைசியில் அருவியில் விழுந்து உயிரை விடலாம் என்று எத்தனித்த போது சிவனடியார் வந்து தடுத்துக் காப்பாற்றினார். 'உன் மகன் திரும்பி வந்திருக்கிறான், அவனை எப்படியும் பார்க்கலாம்' என்று தைரியம் கூறினார். பொன்னா, காட்டாற்று வெள்ளத்திலிருந்து விக்கிரமனை நீ காப்பாற்றினாயாமே?" என்று கேட்டாள்.

அப்போது விக்கிரமன், "வெள்ளத்திலிருந்து காப்பாற்றியதுதானா? சக்கரவர்த்தியின் சிரசாக்ஞையிலிருந்து - காளிக்குப் பலியாவதிலிருந்து - இன்னும் எவ்வளவோ விதத்தில் பொன்னன் என்னைக் காப்பாற்றினான்" என்றான்.

"காளிக்குப் பலியா?" என்று சொல்லிக் கொண்டு அருள்மொழி நடுநடுங்கினாள்.

குள்ளன் மறுபடியும் "ஹீஹீஹீ" என்று பயங்கரமாய்ச் சிரித்தான்.

"பலி! பலி! இன்று ராத்திரி ஒரு பெரிய பலி விழப் போகிறது! - காளியின் தாகம் அடங்கப் போகிறது!" என்றான்.

எல்லோரும் அவனையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இன்று அர்த்தராத்திரியில் சிவனடியார் பலியாகப் போகிறார்! மகாபத்திர காளியின் இராஜ்யம் ஆரம்பமாகப் போகிறது! அப்புறம் - ஹாஹாஹா!... அப்புறம்.... மண்டை ஓட்டுக்குப் பஞ்சமே இராது!" என்றான் குள்ளன்.

விக்கிரமன் அப்போது துள்ளி எழுந்து, "பொன்னா! இவன் என்ன உளறுகிறான்? சிவனடியாரைப் பற்றி..." என்றான்.

"ஹிஹிஹி! உளறவில்லை. உண்மையைத் தான் சொல்கிறேன். அந்தக் கபடச் சாமியாரை இத்தனை நேரம் காலையும் கையையும் கட்டிப் பலிபீடத்தில் போட்டிருப்பார்கள். நடுநிசி ஆச்சோ, இல்லையோ, கத்தி கழுத்திலே விழும்" என்றான்.

அப்போது அருள்மொழித்தேவி விக்கிரமனைப் பார்த்து, "குழந்தாய்! இவன் முன்னேயேயிருந்து இப்படித்தான் சொல்லி என்னை வேதனைப்படுத்திக் கொண்டிருக்கிறான். ஐந்தாறு நாளைக்கு முன்னால் நான் குகையிலிருந்து தப்பி அருவியில் விழப் போனபோது சிவனடியார் தோன்றி, சீக்கிரத்தில் என்னை மீட்டுக் கொண்டு போக ஆட்கள் வருவார்கள் என்று தெரிவித்தார். அந்தப்படியே இவர்கள் வந்து என்னை மீட்டுக் கொண்டு வந்தார்கள். வழியில் மறைந்து

நின்ற இந்தக் குள்ளனையும், பிடித்துக் கொண்டு வந்தார்கள். இங்கு வந்து சேர்ந்தது முதல் இவன் இன்று ராத்திரி சிவனடியாரைக் கபாலிகர்கள் பலிகொடுக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். ஐயோ! எப்பேர்ப்பட்ட மகான்! நமக்கு எத்தனை ஒத்தாசை செய்திருக்கிறார்!.... அவருக்கா இந்தப் பயங்கரமான கதி!" என்று அலறினாள்.

விக்கிரமன் பொன்னனைப் பார்த்து, "பொன்னா! நீ என்ன சொல்கிறாய்? இந்தக் கொடும் பாதகத்தைத் தடுக்கா விட்டால் நாம் இருந்து என்ன பிரயோஜனம்?" என்றான்.

"அதெப்படி முடியும், மகாராஜா! உங்கள் நிலைமையை மறந்து பேசுகிறீர்களே! நாளைப் பொழுது விடிவதற்குள் நாம் மாமல்லபுரம் போய்ச் சேராமற் போனால்..."

"சேராமற்போனால் என்ன? கப்பல் போய் விடும், அவ்வளவுதானே?"

அப்போது பொன்னன் அருள்மொழி ராணியைப் பார்த்து, "அம்மா, இவரைப் பெரும் அபாயம் சூழ்ந்திருக்கிறது. தேசப் பிரஷ்டமானவர் திரும்பி வருவதற்குத் தண்டனை என்னவென்று தங்களுக்குத் தெரியாதா? இவர் இங்கே வந்திருப்பது மாரப்ப பூபதிக்குத் தெரிந்து காஞ்சி சக்கரவர்த்திக்கும் தெரியப்படுத்தி விட்டார். நாளைக் காலைக்குள் இவர் மாமல்லபுரம் போய்க் கப்பலில் ஏறியாக வேண்டும். இல்லாவிட்டால் தப்புவது அரிது. இப்போது சிவனடியாரைக் காப்பாற்றுவதற்காகப் போனால், பிறகு இவருடைய உயிருக்கே ஆபத்துதான். நீங்களே சொல்லுங்கள். இவர் என்ன செய்ய வேணுமென்று?" என்றான்.

அருள்மொழி ராணி பெருந் திகைப்புக்குள்ளானாள்.

விக்கிரமன் அன்னையைப் பார்த்து, "அம்மா! பார்த்திப மகாராஜாவின் வீரபத்தினி நீ! இந்த நிலைமையில் நான் என்ன செய்ய வேண்டும், சொல்! நமக்குப் பரோபகாரம் செய்திருக்கும் மகானுக்கு ஆபத்து வந்திருக்கும் போது, என்னுடைய உயிருக்குப் பயந்து ஓடுவதா? என் தந்தை உயிரோடிருந்தால் இப்படி நான் செய்வதை விரும்புவாரா?" என்றான்.

"இவரை வைத்துக் கொண்டுதான் சித்திரம் எழுத வேண்டும். இவர் பிழைத்திராவிட்டால் பார்த்திப மகாராஜாவின் கனவுகளை நிறைவேற்றுவது எப்படி?" என்றான் பொன்னன்.

அருள்மொழி ராணி இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தாள். கடைசியில், பொன்னனைப் பார்த்து, "பொன்னா! என்னைக் கல்நெஞ்சமுடையவள், பிள்ளையிடம் பாசமில்லாதவள் என்று ஒருவேளை நினைப்பாய். ஆனாலும் என் மனத்திலுள்ளதைச் சொல்கிறேன். நமக்கு எவ்வளவோ உபகாரம் செய்திருக்கும் ஒருவருக்கு ஆபத்து வந்திருக்கும் போது என் பிள்ளை உயிருக்குப் பயந்து ஓடினான் என்ற பேச்சைக் கேட்க நான் விரும்பவில்லை!" என்றாள்.

உடனே விக்கிரமன், தாயாரின் பாதங்களில் நமஸ்கரித்து, எழுந்து, "அம்மா! நீதான் வீரத்தாய்! பார்த்திப மகாராஜாவுக்குரிய வீர பத்தினி!" எனக் குதூகலத்துடன் உரைத்தான்.

பிறகு பொன்னனைப் பார்த்து, "கிளம்பு, பொன்னா! இன்னும் என்ன யோசனை?" என்றான்.

"எங்கே கிளம்பிப் போவது? பலி எங்கே நடக்கிறதென்று யாருக்குத் தெரியும்?" என்றான் பொன்னன்.

"ஹிஹிஹி! நான் வழி காட்டுகிறேன். என்னைக் கட்டவிழ்த்து விடுங்கள்" என்று சித்திரக் குள்ளன் குரல் கேட்டது.

குள்ளனுடைய கட்டுகள் அவிழ்க்கப்பட்டன. அவன் கையில் ஒரு தீவர்த்தியைக் கொடுத்தார்கள். விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மேல் ஏறிக் கொண்டார்கள். குள்ளன் கையில் தீவர்த்தியுடன் மேற்கு நோக்கிக் காட்டு வழியில் விரைந்து செல்ல, விக்கிரமனும் பொன்னனும் அவனைத் தொடர்ந்து பின்னால் சென்றார்கள்.

(தொடரும்)



**"உங்க தலைவர் கட்சித் தொண்டர் ஒருவருக்குத் தமிழ் அகராதி பரிசா கொடுத்தாராமே?"**

**"எந்தக் கூட்டத்தில் பேசினாலும் அந்தத் தொண்டர், தலைவரைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை... தலைவரைப் பாராட்ட வார்த்தைகளே இல்லைன்னு பேசியே முடிச்சிடறாராம்... அதனாலதான்!"**

**— புதுவண்டி ரவிந்திரன்**

# கனவுக் குடித்தனம்

**யா**ருக்குமே நேரக்கூடாத நிகழ்ச்சி!

அதிர்ச்சி! படிக்கும் போதும், கேட்கும் போதும் சாதாரணமாய்ப்படும் சொல்லின் முழு வீர்யம் தந்த விளைவில் செயலற்றுப் போனேன்.

மாலை மூன்று மணிக்கு அலுவலகத்துக்கு போன். அப்பாதான் பேசினார்.

உடனே வா! தந்தி போல வார்த்தை.

ஸ்கூட்டரில் பத்தே நிமிடத்தில் வீடு. வாசலிலேயே அம்மா. முகத்தில் ஆழ்கடல் அமைதி. மஞ்சள் பூசிய முகம் வெளுத்துப் போயிருந்தது.

உள்ளே வந்ததும் தயக்கமாய் ஏறிட்டாள்.

"அம்மா..."

"உள்ளே வா."

ஹாலில் அப்பா! குட்டி போட்ட பூனையாய் நடை.

"என்னப்பா?"

நடையை நிறுத்தி என்னை ஊடுருவிப் பார்த்தார். பார்வையில் தெரிவது பரிதாபமா, இல்லை சோகமா?

"ஓடிப் போயிட்டாளாம்."

ஹனுமானை விட அப்பா ஷார்ப்! கத்தி முனையை விட கூரான வார்த்தை.

"சம்பந்தி போன் பண்ணினார். நித்யா யாரோடவோ ஓடிப் போயிட்டாளாம்."

"எப்ப?"

"நேத்து ராத்திரியாம். காலையிலே எங்கெங்கோ தேடிட்டு, மதியம் போன் பண்ணினார்."

யந்திரகதியில் அப்பா ஒப்புவிக்க, என்னால் முகத்தை நிமிர்த்த முடியவில்லை.

இன்னும் இருபது நாளில் திருமணம். பாவிப் பெண்!

சட்டென எழுந்து என் அறைக்குள் நுழைந்தேன்.

தனிமை! யாரோடும் பேசவோ, பார்க்கவோ முடியாத மனநிலை.

எதிரே சிரித்தபடி போஸ்ட் கார்டு சைசில் நித்யா! தினசரி காலையில் கண் விழிப்பதே அவள் முகத்தில்தான். வாகாய் நிலைக்கண்ணாடியில் செருகி வைத்திருந்தேன் போட்டோவை.

ஜீரணிக்க முடியாத நிலை. எவ்வளவு பெரிய அதிர்ச்சி இது?

என்னென்ன கனவுகள் கண்டேன்! போன மாதம்தான் நிச்சயம். பார்த்ததுமே கவர்ந்து விடும் அழகி. படபடக்கும் கண்கள். குழைந்த முகம்.

உடனேயே ஒகே. அன்றே நிச்சயதார்த்தம்.

தினசரி கனவுகள். கனவுகளில் மட்டுமா? நினைவுகளிலும் நித்யா. உணர்வுபூர்வமாய் ஒரு கனவுக் குடித்தனம். எல்லாமே போச்சு!

மணலில் எழுதிய எழுத்துக்கள் அலை அடித்ததும் அழிவது போல ஆகிவிட்டதே!

அந்தக் குழைவு முகத்தின் பின்னே, இப்படி ஒரு வரலாறா?

பக்கத்து ஊர்தானே! இருபது நிமிட பஸ் பயணம். அவளே வந்து தன் மனத்தில் வேறொருவன் இருப்பதை சொல்லியிருக்கலாமே! அட, போனிலாவது ...ப்ச்!

**அ**ப்பா அருகில் வந்து அமர்ந்தார். கூடவே அம்மாவும்.

"ராஜா, துக்கம் தான். விழுங்கித்தான் ஆகணும்."

அப்பாவின் ஸ்பரிசத்தில் கரைந்து போனேன். விம்மலாய் என் சோகம் வெளிப்பட, அம்மா பதறி விட்டாள்.

என் பெற்றோர் யாருக்கும் தீங்கு எண்ணாத நல்லவர்கள். கொள்கையுடன் வாழ்க்கை நடத்துபவர்கள்.

வரதட்சணை, சீர்... மூச்! மருமகள்தான் சீதனம்!

பெருந்தன்மையாய் நடந்து கொள்வதையே இயல்பாக்கிக் கொண்டவர்கள்.

"கல்யாணத்துக்கு முன்னாடி இது நடந்ததேன்னு சந்தோஷப்பட்டுக்கடா."

அம்மா சொன்ன ஆறுதல் நிஜமாய்ப் பட்டது.

"ராஜா, நீ உன்னை மட்டுமே

யோசிக்கறே..."

"அப்பா?"

"நித்யாவோட அப்பா, அம்மா நிலைமையை எண்ணிப் பாரு."

"அப்பா!"

"ஆமாண்டா. துக்கம் நம்ம ரெண்டு குடும்பத்துக்குமே இப்ப பொது. நீ அங்கே போய் அவங்களுக்கு ஆறுதல் சொன்னால் நல்லாயிருக்கும்."

பிரமிப்புடன் அப்பாவை ஏறிட்டேன்.

தன் துக்கத்தை புறந்தள்ளி இந்த நேரத்திலும் அப்பா அவர்களைப் பற்றி சிந்திப்பதென்றால்... ரியலி கிரேட்!

"நாங்க போறதை விட, நீ போறது தான் பொருத்தமாய்ப்படுது. ப்ளீஸ்..."

அப்பாவின் சொல்லைத் தட்ட முடியாது. எனக்குள்ளும் அவர்கள் மேல் இரக்கம் எழுந்தது.

ஸ்கூட்டரிலேயே மீண்டும் பயணம்.



# கிருஷ்ணா

அதோ வீடு! வாசலில் கிரில் கேட். பக்கத்தில் முல்லைக் கொடியில் வெள்ளைப் பூக்கள்.

கிரீச்சிட்ட கதவைத் தள்ளி உள்ளே போனேன்.

என்னைக் கண்டதும் திக்பிரமை நிலையில் நித்யாவின் அம்மா!

முகத்தில் பயமும் குழப்பமும். எதற்கு பயம்? சண்டை போட வந்திருக்கிறேன் என்ற பயமா?

'வாங்க' என்று கூட அழைக்கத் தோன்றாமல் உள்ளே ஓடினாள்.

போன முறை வந்த போது என்ன கலகலப்பான வரவேற்பு. எப்படி நுழைய வேண்டியவன், இப்படி... விதி!

"மாப்பிள்ளை வந்திருக்காரு."

உறவு இன்னும் வார்த்தையளவில் மாறவில்லை.

"மாப்பிள்ளையா? யாரு?"

நித்யாவின் அப்பாவின் எதிர் கேள்வி.

"முதல்ல வெளியே வாங்க நமை விட்டு."

வந்தார்! ஒரே நாளில் இப்படிக் கூட வதங்கிப் போக முடியுமா? வெள்ளை வேட்டி, சட்டையில், நெற்றி நிறைய விபூதியுடன் பளிச்சென்று சிரிக்கும் உருவத்தை யார் கொள்ளையடித்து விட்டார்கள்?

தளர்ந்து போய் வந்தவரை அருகில் சென்று அணைத்துக் கொண்டேன்.

அவர் முகத்தில் விரிந்த அவமானம், வெட்கம், துயரம்... அப்பப்பா! பரிதாபமான உணர்ச்சி!

என் அணைப்புக்குள் ஒடுங்கிக் கொண்டார். ஒட்டிக் கொண்டவரின் உடல் குலுங்க ஆரம்பித்தது.

எதிரே நின்று கொண்டிருந்த மாமியின் கண்ணிலும் நீர்.

"மாப்பிள்ளே!"

உடைந்து போய்க் கதறினார் மாமி.

ஒரே பெண்! இப்படி முகத்தில் கரி பூசி விட்ட வேதனை.



## புரியாத கவிதைகள்....

சிற்றிதழ்களில்
மணக்கும்
கத்திரிப் பூக்கள்.

உதடுகளில்
புரண்டு
மனதில்
உறங்காத
மௌனப்
புன்னகை.

அறிவு
ஜீவிகளின்
அற்புதவிளக்கு
சிலருக்கே
வெளிச்சப் பாவனை.

அறிமுகக்
கவிஞர்களை
ஆணியில்
அறைந்துவிட்ட
இக் கவிஞர்கள்
எதற்காக
சிலுவை
ஏந்துகிறார்கள்?

பாரதியின்
பாதையை மறித்துப்
புரியாத தடத்தில்
பூட்டிக் கொண்டவர்கள்.

மன்னியுங்கள்
மன்னர்களே,
இலக்கியம்
மக்களுக்காக.

— சாரதா நாகரத்தினம்

சமாதானப்படுத்தும் பொறுப்பு என் தலையில்.

நித்யாவின் அப்பாவை சேரில் அமர வைத்தேன்.

"வெறிச்ச பார்வையாய் உட்கார்ந்திருக்காரு. பயமாயிருக்கு."

மாமியின் குரலில் நிஜமான வலி.

"பால் கொஞ்சம் கொண்டு வாங்க."

மாமி உள்ளே விரைந்தாள்.

வற்புறுத்தி குடிக்க வைத்தேன். என் சொல்லை மீற முடியாமல் விழுங்கினார்.

"நீங்களும் இப்படி வந்து உட்காருங்க."

மாமி பதில் பேசாது அப்படியே தரையில் அமர்ந்தாள்.

நானே சமையலடி சென்று கையில் இன்னொரு தம்ளர் பாலுடன் திரும்பினேன்.

மாமிக்கு இது! ஒரே மூச்சில் குடித்தாள்.

பக்கத்து வீட்டுப் பையன் எட்டிப் பார்த்தான். தெருமுனை கடைக்கு அனுப்பினேன்.

இரண்டு பொட்டலம் தோசை. கொஞ்சம் தெம்பாய் அழுதார்கள். தேம்பினார்கள். அழுகை மறைந்து மௌனமாய் இருந்தார்கள்.

"என்னை நீங்க மதிக்கறதாய் இருந்தால் பட்டினி கிடக்கறதை விட்டுடணும்."

மிரட்டி விட்டுக் கிளம்பினேன்.

வாசல் வரை வந்தார் நித்யாவின் அம்மா.

"மாப்பிள்ளே..." - தயக்கமாய் அழைத்தார்.

நின்று பார்த்தேன்.

"ஒரு பத்து நாளைக்குத் தொடர்ந்து நீங்க இங்கே வர முடியுமா ஒரு தடவையாவது?"

புரிந்தது. என் வரவு அவர்களுக்கு ஒரு பிடிப்பைத் தருகிறது. முக்கியமாய் நித்யாவின் அப்பாவுக்கு.

"என்ன மாப்பிள்ளே?"

"வரேன். ஆனால் ஒரு கண்டிஷன்..."

"என்ன?"

"இனிமே என்னை மாப்பிள்ளேன்னு கூப்பிடக்கூடாது."

"பின்னே?"

புன்னகைத்தேன். அவருக்குப் புரிந்திருக்க வேண்டும். கண்கள் பனிக்க என்னைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்தார்.

நீலா எதிர்பார்த்தபடி சேது 'சென்னை செய்தி' அலுவலகத்துக்கு வந்தபோது மணி ஒன்றாகி விட்டது. அவனுக்காக செங்கோடன், நீலா, மூர்த்தி மூவருமே பொறுமையில்லாமல் காத்திருந்தார்கள்.

"வாங்க சேது... இவர்தான் பத்திரிகை ஆசிரியர் செங்கோடன்... மூர்த்தியை உங்களுக்கு ஏற்கெனவே தெரியும்" என்று அறிமுகப்படுத்தினாள் நீலா.

"வணக்கம் சார்... நீலா உங்களைப் பற்றி நிறைய சொல்லி இருக்கிறாள்" என்று சேது நாற்காலியில் உட்கார்ந்தான்.

"நீலா ரொம்ப கெட்டிக்காரத்தனமா இந்த விஞ்ஞான ஆராய்ச்சி பற்றி நிறைய விவரம் குறைந்த நேரத்திலே கண்டு பிடிச்சிருக்கா. 'சென்னை செய்தி'யிலே இவையெல்லாம் வெளி வரும் போது நம்முடைய பத்திரிகையின் மதிப்பு பன்மடங்கு உயரும்" என்று நீலாவை நேரடியாகப் பாராட்டினார் செங்கோடன்.

"மூர்த்திக்கும் இதில் நிறைய பங்குண்டு... என்றாள் நீலா, அடக்கமாக.

"நான் மேலதயான் பூச்சிக் கொல்லி விநியோகத்தில்தான் ஈடுபட்டிருக்கேன். அதைத் தவறாகப் பயன்படுத்தினால் விபரீத விளைவுகள் உண்டு. அதற்கு நாம் இடம் தரக் கூடாது. அதனால் தான் இதோ இந்தப் பட்டியலை எடுத்து வந்திருக்கிறேன்" என்று செங்கோடனிடம் நீட்டினான் சேது.

அது கிராமத்தின் பெயர்களைக் கொண்ட பட்டியல். சென்னையைச் சுற்றி குடிநீர் கொண்டு போகப்படும் கிராமங்கள். சேது கம்பெனி விற்ற 'மேலதயான்' மூட்டைகளில் தொண்ணூறு சதவீதம் அந்தக் கிராமங்களுக்குப் போயிருக்கின்றன. இது சில ஆண்டுகளாக நடந்து கொண்டிருந்த விவரம்.

"இதில் இருக்கும் இருபத்தெட்டு கிராமங்களில் எந்த கிராமத்தைன்னு நாம தேர்ந்தெடுத்து விவரம் கண்டுபிடிக்கிறது?" என்று மூர்த்திதான் கேள்வியை எழுப்பினான்.

"நாம ஒவ்வொருவரும் ஒரு கிராமம்னு போனா ஆளுக்கு ஒரு கிராமம் ஆகுமே... இன்னும் கொஞ்சம் சீக்கிரமே விவரம் தெரியுமே" என்றான் சேது.

"அதற்குள் அமைச்சர் ரங்கதுரை சும்மா கையை கட்டிக் கிட்டு இருப்பார்னு நினைக்கிறீங்களா சேது?" என்று கேலியாகக் கேட்டாள் நீலா.

அந்த நேரத்தில் செங்கோடனின் தொலைபேசி அலறியது.

"யார் டாக்டர் பிரபுவா? சரி..." என்று பேசும் பகுதியைக் கையால் பொத்திக் கொண்டு, "டாக்டர் பிரபு என்னுடன் பேசணுமாம்.... கொஞ்சம் இருங்க" என்று மற்ற மூவருக்கும் சொல்லிவிட்டு பிரபுவிடம் பேச ஆரம்பித்தார்.

"ஆமாம்... நான்தான் எடிட்டர். சொல்லுங்க... ம்... ம்... சரி... நான் இருக்கேன்... ம்... ம்... பார்க்கலாம்" என்று போனை வைத்தார்.

"உண்மை இன்னும் சாகவில்லை, நண்பர்களே! டாக்டர் பிரபு இங்கே வரப் போகிறார். நேரடியாக என்னிடம் பேசணுமாம்... 'மேலதயான்' பற்றிப் பேசணுமாம்..." என்று சொன்ன செங்கோடனின் முகம் மலர்ந்தது.

"பிரபு இங்கே வர்றதுன்னா, ரங்கதுரைக்கும் பிரபுவுக்கும் ஏதோ தகராறுன்னு அர்த்தமா? இல்லை பிரபுவுக்குத் தெரியாமல் ரங்கதுரை ஆராய்ச்சியின் திசையைத் திருப்பினார்னு

எடுத்துக்கிறதா?" என்று மூர்த்தி கேள்விகளை அடுக்கினான்.

அவனுடைய கேள்விகளுக்கு அரைமணி நேரத்தில் அங்கு வந்து சேர்ந்த பிரபு பதில்களைத் தந்தார்.

அவருடைய குரலில் வழக்கமான கம்பீரம் இல்லை. கண்கள் சிவந்து, முகம் சவரம் கூட இல்லாமல் ஆராய்ச்சியாளர், டாக்டர் பிரபுதானா என்று நீலா வியக்கும்படி அவர் தோற்றம் இருந்தது.

"நான் சொல்லப் போறதை கவனமாய்க் கேளுங்கள்'' என்று பீடிகை போட்டு டாக்டர் பேசினார்.

ரங்கதுரையும் பிரபுவும் அரசியலுக்கும் அறிவியல் ஆராய்ச்சிக்கும் நல்லபடியே முடிச்சு போட முடியும்னு ஆரம்பித்த ஒரு பிராஜக்ட்தான் 'மேலதயான்' ஆராய்ச்சி. விஞ்ஞானத்தால் விவசாயம் ஏற்கெனவே நிறைய பயன்களை அடைந்திருக்கிறது. எலித் தொல்லையை ஒழித்தால் லட்சக்கணக்கான பணம் விரையமாகாமல் இருக்கும் என்று ரங்கதுரை சில கிராமங்களைத் தேர்ந்தெடுத்தார்... அந்த அளவு டாக்டர் பிரபுவும் நல்ல நோக்கத்துடன் உதவி செய்தார். கிராமங்களுக்குத் தேவையான 'மேலதயான்' வாங்கப்பட்டது. ஆரம்பத்தில் பிரபுவிடம் எந்தெந்த கிராமங்கள் என்று ரங்கதுரை சொன்னார். ஆனால் பிரபுவிடம் சொல்லப்படாத எத்தனை கிராமங்களோ? பிரபுவும் இரண்டு கிராமங்களுக்கு அடிக்கடி போய் அங்கே எலி ஒழிப்புக்கான பரிசோதனைகளை நடத்தி, புள்ளி விவரங்களை ரங்கதுரைக்குச் சொன்னார். திரும்பத் திரும்ப இதையே செய்ய விரும்பாமல் பிரபு தன் கவனத்தை வேறு ஆராய்ச்சிகளில் செலுத்தினார். ரங்கதுரையும் எதுவும் கேட்பதை நிறுத்திக் கொண்டார். ஆனால்... ரங்கதுரை தானாகவே கிராமத்து ஆண்களை பரிசோதனைக்குள்ளாக்கியது பிரபுவுக்குத் தெரியாமலே போனது. யார் சொல்லுவார்கள்? பாலுவும் சாலமனும் ரங்கதுரைக்கு இப்போது உதவுகிறார்கள் என்று நீலா சொன்ன போதுதான் பிரபுவுக்கு ஞானோதயம் ஏற்பட்டது. அதற்குள் எத்தனை கிராமத்தில் மக்கள் பரிசோதனைக்குள்ளானார்களோ?

பிரபு சொல்லி முடித்து அடுத்த சில நிமிடங்கள் அறையில் யாரும் பேச முடியவேயில்லை. மூர்த்தியும் செங்கோடனும் 'நீலா சரியாகவே இதையெல்லாம் ஊகித்திருக்கிறாள்' என்று நினைத்துக் கொண்டனர்.

"டாக்டர் பிரபு, நீங்கள் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட இரண்டு கிராமங்களின் பெயர்களைச் சொல்ல முடியுமா?" என்றார் செங்கோடன்.

"சொல்வது மட்டுமில்லை... உங்களுடன் நானும் வர வேண்டியிருக்கும்... என் 'மேலதயான்' ஆராய்ச்சி, மக்களை எந்த அளவு பாதிச்சிருக்குன்னு நான் பார்க்கணும்... எப்போது போகலாம்?" என்றார்.

"இப்போதே போகலாம். இன்னக்கி அந்த ஒரு கிராமத்துக்குப் போய் தெரிஞ்சிக்குவோம்... தேவையானால் பிறகு போவோம்" என்றார் செங்கோடன்.



பிரபுவின் காரிலேயே எல்லோரும் போனார்கள். வழியில் 'மேலதயான்' பற்றிய மற்ற விவரங்களை பிரபு சொல்லிக் கொண்டே வந்தார்.

"அமெரிக்காவில் இந்த பூச்சிக்கொல்லியை கலிபோர்னியா மாகாணத்தில் அடிக்கடி அதிக அளவில் பயன்படுத்துகிறார்கள். 1955-ம் ஆண்டிலிருந்து காய்கறி, பழ வகைகளைச் சாப்பிட்டு வீணடிக்கும் 'மெடிட்டரேனியன் ஃப்ளை' என்னும் பூச்சித் தொல்லை அங்கு அதிகம். வடஅமெரிக்காவின் பல மாகாணங்கள் கலிபோர்னியாவில் விளையும் காய்கறி, பழவகைகளை நம்பி தான் இருக்கின்றன. இந்தப் பூச்சித் தொல்லையால் ஆண்டுக்கு நூறு கோடி டாலருக்கு மேல் சேதம் ஆகிறதாம்" என்றார் டாக்டர் பிரபு.

"அதற்காக 'மேலதயான்' மருந்தை ஹெலிகாப்டரிலிருந்து தூவுகிறார்கள் என்று நான் படித்திருக்கிறேன்" என்றாள் நீலா.

"கலிபோர்னியான்னு பேசற போது எனக்கு ஒண்ணு நினைவு வருது" என்று செங்கோடனும் கலந்து கொண்டார். 'அங்கே 1981ல் பி.டி.காலின்ஸ் என்கிற அதிகாரி ஒருவர் என்ன செய்தார் தெரியுமா?"

"சார் நீங்க எப்பவும் புதிர் போடாம பேச மாட்டீங்களா?" என்றான் மூர்த்தி. எல்லோரும் சிரித்தார்கள்.

" 'மேலதயான்' கரைச்ச ஒரு கப் தண்ணியைக் குடித்தார்; கூடியிருந்த மக்களுக்கு 'மேலதயான்' அபாயகரமான ஒரு பூச்சிக் கொல்லி மருந்து இல்லைன்னு அவங்களுக்குக் காட்டுவதற்காக இந்த 'ஸ்டண்ட்'."

"இந்தப் பூச்சிக்கொல்லி புற்றுநோய் போன்ற வியாதியை ஏற்படுத்தாது என்பது மக்களுக்குத் தெரிவிக்கணும்னு அப்படி செய்திருக்கலாம்.... ஆனால் 'ரிபொரக்டிவ் டாக்சிசிட்டி" நிச்சயம் உண்டு."

"இன்னும் கொஞ்ச நேரத்தில் தெரியும்" என்று மூர்த்தி சொன்னான்.

அடுத்த சில நிமிடங்களில் அவர்கள் பிரபு சொன்ன கிராமத்துக்கு வந்து சேர்ந்தனர். வெளிச்சம் கொஞ்சம் இருந்தது. தெருவில் ஒன்றிரண்டு சைக்கிள்கள், மாடுகள்; கொஞ்சம் மக்கள் நடமாட்டம். தூரத்தில் சினிமா கொட்டகையிலிருந்து அப்போது மக்கள் விரும்பிய பாட்டு ஒலித்தது.

முதலில் பிரபுவின் கண்ணில் பட்டது 'குழந்தை வைத்தியம் பார்க்குமிடம்' என்ற பலகைதான். பிரபுவுக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. மற்றவர்களுக்கு அதைச் சுட்டிக் காட்டினார்.

---

## அல்லி ராஜ்ஜியம்!

ரயில்வே ஸ்டேஷனில் வண்டி வந்து நின்றதும், பிளாட்பாரத்தில் வரிசையாக பாட்ஜ் அணிந்து உட்கார்ந்திருக்கும் போர்ட்டர்கள் ரயிலுக்குள் தாவி ஏறி நம் உடமைகளை சுமந்து செல்லத் தயாராவது வாடிக்கையான காட்சி.

ஆனால், மிகச் சிறிய பவநகர் ரயில் நிலையத்தில் இக்காட்சியில் சிறு வித்தியாசம்.

ஆண் போர்ட்டர்களுக்குப் பதிலாக, பெண்கள்! நம் நாட்டில் பெண் போர்ட்டர்களைக் கொண்ட ஒரே ரயில் நிலையம் என்ற பெருமையை பவநகர் தட்டிச் செல்கிறது.

ஒரு நாளைக்கு பதினாறு ரயில்கள் இந்த நிலையத்தைக் கடந்து செல்கின்றன. ஆயிரத்தி முன்னூறு முதல் ஆயிரத்தி ஐநூறு பயணிகள் தினமும் இங்கே இறங்கி ஏறுவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

சிறுமிகளாக இருந்தபோது வயிற்றுப் பிழைப்பிற்காக ரயில் வந்து நின்றதும் பயணிகளின் உடமைகளை தூக்கிச் செல்ல ஆரம்பித்து பிறகு அதுவே தமது முழுநேரத் தொழிலாக ஆகிவிட்டதாகக் கூறும் சில பெண்களின் வயது இப்போது அறுபதுக்கும் மேல்!



தங்களுடைய பெண்களை இந்தத் தொழிலில் ஈடுபடுத்த இந்தப் பெண்கள் தயக்கம் காட்டுகின்றனர், காரணம், இதில் வருமானம் மிகவும் குறைவு. சில நாட்களில் வெறும் இரண்டு ரூபாயுடன் வீட்டுக்குத் திரும்பிச் செல்லும் நிலைமையும் ஏற்படும்! அதிக பட்சம் பத்து ரூபாய். அதனால் இளைய தலைமுறை இதில் ஆர்வம் காட்டவில்லை. இந்த அல்லி ராணிகளின் மத்தியில் ஒரிரு ஆண் போர்ட்டர்களும் இப்போது சேர்ந்து கொண்டிருக்கின்றனர்!

இருபத்தி ஐந்தே வயதான நீலா தேவி ஜலா, பவநகர் பகுதியின் முதல் பெண் கமர்ஷியல் இன்ஸ்பெக்டராக பதவி ஏற்றிருக்கிறார். ஒரு பெண் மரியாதைக்குரிய பதவியில் இருப்பதால் தங்களுக்கு எதிர் காலம் பிரகாசமாக இருக்குமென்று நம்புகின்றனர்.

இவர்கள் எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்ப்பது ஒரு பெண் ஸ்டேஷன் மாஸ்டரை!

— கலா

நன்றி : ஃபெமினா

"அப்படின்னா இந்த கிராமத்துலே குழந்தைகளுக்குக் குறைவில்லை போல இருக்கு" என்றான் மூர்த்தி.

"இங்கே 'மேலதயான்' சரியா வேலை செய்யலை போல இருக்கு" என்றான் சேது.

"ரங்கதுரை இந்த கிராமத்துலே தன் கை வரிசையைக் காட்டியிருக்க மாட்டார்னு நான் நினைக்கிறேன்" செங்கோடன் சிந்தனையுடன் சொன்னார்.

"எதையும் நாம எப்படித் தீர்மானமாகச் சொல்ல முடியும்? எந்தவித அத்தாட்சியும் இல்லையே... நாம யார் கிட்டேயாவது பேச வேண்டாமா? இந்த கிராமத்திலே உரம், பூச்சிக்கொல்லி மருந்து யாராவது வாங்கறாங்களான்னு தெரிஞ்சிக்கிட்டா நல்லது" நீலா தன் கருத்தைச் சொன்னாள்.

"நான் ரங்கதுரையுடன் பிராஜக்டை ஆரம்பித்த போது இது நாங்க தேர்ந்தெடுத்த ஒரு கிராமம். இங்கே அடிக்கடி விவசாயிகளிடமிருந்து புகார் வந்தது; அவர்கள் தானியங்கள் எலிகளால் சேதமடைகின்றன என்று அமைச்சருக்கு மனு போட்டார்கள்."

அப்போது எதிர்ப்புறமாக நிறைய சிறுவர்கள் ஓடி வந்தார்கள். அந்த சிறுவர் கூட்டத்தில் இரண்டு மூன்று வயது சிறிய குழந்தைகளும் தட்டுத் தடுமாறி ஓடிக் கொண்டிருந்தன. சில குழந்தைகள் கையில் குச்சியை எடுத்துக் கொண்டு ஓடின. சில அம்மணமாக ஓடின. சில மேல் சட்டையில்லாமல் ஓடின. அந்தக் காட்சியைப் பார்த்ததும் நீலாவின் மனம் நிறைந்தது. நிச்சயமாக ஒன்று தெரிந்தது. தமது விபரீத ஆராய்ச்சியை ரங்கதுரை இங்கே பயன்படுத்தியிருந்தாலும் அது வெற்றியடையவில்லை.

குழந்தைகளைப் பார்த்த பிரபுவும் சிந்தனையில் ஈடுபட்டார். 'மேலதயான்' மருந்தை ரங்கதுரை எப்படி மக்களுக்கு உணவில் கலக்க முடியும்? ஏன், குடிதண்ணீரில் கலக்கலாமே... இங்கு அப்பாவி மக்கள் குடிநீருக்காக அலையும் அவலம்தான் உலகறிந்த செய்தியாயிற்றே. அப்படி ரங்கதுரை செய்திருந்தால் நிச்சயம் இத்தனை ஆண்டுகளில் இத்தனை குழந்தைகள் இந்தக் கிராமத்தில் பிறந்திருக்கவே முடியாதே. ஒன்று ரங்கதுரை இந்தக் கிராமத்தில் எதுவும் செய்யவில்லை. இல்லையென்றால், 'மேலதயான்' தண்ணீரில் தன் சக்தியை இழந்து விட்டது. அதெப்படி சாத்தியம்?

பிரபுவின் திட்டம் வலுப்பெற்றது. அடுத்து செய்ய வேண்டியது அந்தக் கிராமத்துக்கு வரும் குடிநீர் வசதி பற்றித் தெரிந்து



"இப்படியே எத்தனை நாள்தான் காதலித்துக் கொண்டிருப்பது...?"
"ஆமாம்! எனக்கும் வெறுத்து விட்டது. சீக்கிரம் வீட்டில் பெண் பார்க்கச் சொல்லி வைக்கப்புல செட்டில் ஆகிடணும்!"
– ஜி. செல்லத்துரை

கொள்ள வேண்டும். குடிநீரை ஆராய்ச்சி அறைக்கு எடுத்துப் போய் அதில் 'மேலதயான்' எவ்வளவு இருக்கிறது என்று பார்க்க வேண்டும். அது எந்த அளவு தண்ணீரினால் பாதிக்கப்படுகிறது என்பதையும் பரிசோதிக்க வேண்டும். தன் திட்டத்தை மற்றவர்களுக்குச் சொன்னார்.

கிராமத்தின் ஓரத்தில் தண்ணீர் லாரிகள் வந்து நின்று குடிநீரை நிரப்ப வசதியாக பெரிய தண்ணீர்த் தொட்டிகள் மூன்று இருந்தன.

அவர்கள் கார் அங்கே வந்த போது இருட்ட ஆரம்பித்து விட்டது. தண்ணீர் லாரிகள் இரண்டு தொட்டிகளை நிரப்பி விட்டு புறப்படத் தயாராக இருந்தன. லாரி டிரைவர்கள் பீடி குடித்துக் கொண்டு நின்றிருந்தனர். பெரிய குழாய்களை ஆட்கள் லாரியின் பக்கத்தில் வளைத்துக் கட்ட ஆரம்பித்தனர்.

பிரபு காரிலிருந்து இறங்கும் போது அவர் கையில் மூன்று பாட்டில்கள் இருந்தன. நிரப்பப்பட்ட தொட்டியிலிருந்து தண்ணீர் பிடித்தார். நிரப்பப்படாத தொட்டியிலிருந்தும் பிடித்தார். தண்ணீர் லாரிக்கு அருகே போய் அதிலிருந்து ஒழுகிக் கொண்டிருக்கும் தண்ணீரையும் ஒரு பாட்டிலில் பிடித்தார். அப்போது லாரி டிரைவர் ஒருவன் வேகமாக ஓடிவந்து, "ஏன் சார் தண்ணி பிடிக்கிறே?" என்றான்.

"நான் அரசாங்க அதிகாரி... அதை பரிசோதனை செய்யணும்" என்று அதிகாரத் தொனியில் பேசினார்.

டிரைவர் மேலே பேசவில்லை. பிரபுவின் கார் லைசென்ஸ் நம்பரை மட்டும் எழுதிக் கொண்டு லாரியில் ஏறினான். பிரபு லாரி டிரைவரிடம் பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்த மூர்த்தி, லாரி இரண்டின் நம்பர்களையும் குறித்துக் கொண்டான். நீலாவிடம் கொடுத்து எதையோ சொன்னான்.

(தொடரும்)

# ஜமீன் வீடு

ம.வே. சிவகுமார்

மெல்லிய அதிகாலை வெயில். பச்சை வயல் நடுவே தார் ரோடு. வேன் ஜன்னலில் சில்லென்று வீசும் காற்று. தொலைவில் பனி மூடிய மலைத் தொடர்ச்சி. மழை பெய்து தேங்கிய நீரில் வாடி நிற்கும் கொக்கு. தகரத்தில் கூரை போட்ட பம்பு செட். துருப்பிடித்த சூலம் சாய்ந்த பாழடைந்த கோவில். பானைத் தலை சோளக் கொல்லை பொம்மை. பாறைகளில் பீடி விளம்பரம். பனை மரங்களின் உச்சியில் சூரியன் குதித்துத் தொடர்கிறது. வரப்பின் மேல் கோவணச் சிறுவன் கையசைக்கிறான். செங்கல் சூளை, அய்யனார் சிலை, ஆளில்லா இரயில் பாதை என்று கிளைச் சாலையில் மேலும் லொடலொடத்து திரும்பிய திசை மறைத்து பிரும்மாண்டமாய் தொலைவில் ஜமீன் வீடு தெரிகிறது.

வார்ப்பு இரும்பில் தோட்டக்கதவு. அலங்கார நீரூற்று, பாதையை இரண்டாகப் பிளக்கிறது. புல்தரை நடுவே அலுமினியப் பெயிண்ட் அடித்த சிமெண்ட் புலி. ஒரு குலுக்கலுடன் யூனிட் வேன் நிற்கிறது. வெள்ளையும் சள்ளையுமாய் படப்பிடிப்புக் குழுவினர் இறங்குகிறார்கள். மஞ்சள் துணி சுற்றிய கேமரா இறங்குகிறது. தொடர்ந்த வேறு வண்டியில் மலிவுப் பாத்திரங்களில் காலைச் சிற்றுண்டி, மடக்கு நாற்காலிகள், பரிமாறும் ஆட்கள். மறைவில் ஜெனரேட்டர் வேன் இரைகிறது. பித்தளை மின்னுகிற கோச்சு வண்டியில் குதிரைகள் கால் மாற்றிக் கொள்கின்றன. அண்ணாந்த பார்வைக்கு அடங்காத ஜமீன் வீடு. மரத்திலிருந்து நாகலிங்கப் பூ காற்றில் சுற்றிக் கீழே விழுகிறது.

விழுப்புரம் விஜயகணேசன் பிரமிப்புடன் பார்க்கிறான். விழுப்புரத்தில் தலைமுறைக்கும் அரை வயிற்றுக் கஞ்சியை உறுதி செய்கிற கையகல நிலம் கொண்ட சராசரிக் குடும்பத்தின் மூத்த மகன். சிறு வயதில் பள்ளிக்கூடம் போகிற வழியில் தியேட்டர் போஸ்டர்களின் முன் இப்படி நிற்கப் போய் தான் வாழ்க்கை திசைமாறி விட்டது. நோட்டுப் புத்தகத்தில் விஜயகணேசன் கவிதைகள் எழுதினான். விழுப்புரத்தில் யாருக்கும் அவனுடைய கவிதைகள் புரியவில்லை.

அப்பா களைத்து நிமிர்ந்த போது விஜயகணேசன் எதிரில் நின்றான். சினிமாவில் சேருவதற்கு சென்னை போகிறான். அவன் அனுமதி கேட்கவில்லை. வெறும் தகவல் தெரிவிக்கிறான். அப்பா, வாயடைத்துப் போனார். அம்மா, தங்கச்சிகளைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

சீக்கிரமே செங்கல்பட்டு வந்து விட்டது. தெரிந்த நண்பன் தயவில் நாட்கள் ஓடி, வருடங்களானது. நல்லவேளையாய் தற்சமயம் ஓர் உதவி இயக்குனர் வேலை கிடைத்திருக்கிறது. ஆனால் டைட்டிலில் வரும் வரை எதுவுமே நிச்சயம் கிடையாது.

விஜயகணேசன், ஜமீன் வீட்டின் ஒவ்வொரு அறையாகப் பார்த்துக் கொண்டிருக்கிறான். வெள்ளைக்கரு, வெல்லம், கடுக்காய், கண்ணாம்பு என்று கலவையில் வழவழக்கிற தந்தம் போல் தூண்கள். சுவரில் துப்பாக்கிகள். பாடம் செய்யப்பட்ட காட்டெருமையின் தலை. தொன்மை தெரியும் தேக்குமர வேலைப்பாடுகள். ஆட்களை மரத்தில் கட்டி வைத்து அடிக்கிற வெவ்வேறு வித சவுக்குகள். ஆளுயர உயரத்தில் ஜரிகைக் குல்லா அணிந்த பழைய ஜமீன்தார் அவனை பதிலுக்கு முறைக்கிறார். வரிசையில் கடைசியாய் சுமார் பத்தொன்பது வயதில் இளைஞன் ஒருவனின் புகைப்படம். நெற்றியில் குங்குமம் வைத்து காய்ந்த மாலையின் நடுவே பளிச்சென்று பல்ப் எரிகிறது.

கோட்டை வீட்டில் படப்பிடிப்புக் குழுவினர் வந்திறங்கிய விஷயம் ஊருக்குள் எப்படிப் பரவியதென்று தெரியவில்லை. வயலுக்குப் புறப்பட்டவர்கள் வழியில் நின்று விட்டார்கள். கடைக்குப் போன மூத்தவனைத் தேடிப் போன சின்னவனும் வீடு திரும்பவில்லை. தகவல் தெரிந்து விறகை இழுத்து உடன் சமையல் முடித்த தாய்மார்கள் இடுப்புக் குழந்தையுடன் ஓடி வருகிறார்கள். மெயின் ரோட்டில் எட்டிப் பார்த்து பஸ் கும்பல் இறங்குகிறது. உள்ளூர் பள்ளிக்கூடம் ஒருநாள் விடுமுறை. ஐஸ் வண்டிகளின் ஹாரன் சப்தம். அருகே பெட்டிக் கடையில் அமோக வியாபாரம். வெளியே இரும்புக் கதவு மூடப்படுகிறது.

காவலுக்கு வந்த போலீஸ்காரர்கள் முதற்கண் சிற்றுண்டியை முடிக்கிறார்கள். பின்கட்டில் மேலும் அதிசயங்கள் காத்திருக்கின்றன. தோளுக்குக் குறுக்கே பூணூல் போல் ஒரு கயிற்றில் ஜமீன் வீட்டின் சாவிக் கொத்து சுமந்ததில் வளைந்த பழைய வேலையாள் வழிகாட்ட, விஜயகணேசன் பின்தொடர் கிறான். மாட்டுத் தொழுவம், குதிரை லாயம், வில்வண்டி அறை, வேட்டை நாய்களின் கூண்டுகள் என்று வெறுமையில் எல்லாமும் சரித்திரம் சொல்லிக் கொண்டிருக்க, பின் பக்கம் தோட்டம் வருகிறது.

"இளநீர் சாப்பிடறீயளா?"

நடுங்கும் கைகளில் வளைந்த கிழவன் அன்புடன் நீட்டுகிறான்.



தென்னை, மா, பலா, வாழை என்று தரையில் விழுந்த தண்ணீர் போல் நான்கு பக்கமும் பரவிய ஜமீன். விழுப்புரத்தில் குச்சு வீடும் கையகல நிலமும் பார்த்த விஜய கணேசனுக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. கட்டிய மனைவியைப் பிரிந்து சீமைக்குப் போன மாதிரி இத்தனை செழுமையையும் பராமரிப்பையும் பட்டப்பிடிப்புக்கு விட்டு விட்டு, இதன் உரிமையாளர்கள் எங்கே போய் விட்டார்கள்? மனத்தில் கேள்வி. உதித்த அதே விநாடியில் எதிரே குத்துக் காலிட்ட வளைந்த கிழவன் பதிலை எதி ரொலிக்கிறான்.

"போட்டோ பார்த்தீய. கடைசியா ஒரு போட்டோ பார்த்தீயளா? சிறு பையன். வயசு இருபதுக்குள்ளாரத்தான் இருக்கும். பெரியவருக்கு ஒரே மவன். ஆளப் பொறந்த ராசா. ஆனா விதின்னு ஒன்னு முறுக் கிட்டு நிக்கும் போது என்ன செய்ய? அதுக்குள்ள போய்ச் சேர்ந்து பொட்டு வைச்சாச்சு. அவரு பொறந்ததுக்கு கனரே வேட்டி வாங்கினது இப்பம் மாதிரி இருக்கு."

இளநீர் முடிந்த தேங்காய் பிளவுண்டது. அதிலேயே ஒரு செதுக்கலில் வழுக்கை சுரண்டி ஒன்றாக்கிப் பேசிக் கொண்டே வளைந்த கிழவன், விஜயகணேசனிடம் திரும் பவும் தருகிறான்.

"அவர்தான் கடைசி. வெகுவான வயசுப் பிரச்னையிலே சிக்கிக்கிட்டு நாலைஞ்சு தலை சாய்ஞ்சுருச்சி. அதுலே அவர் ஆசை வைச்ச பொண்ணும் போச்சு. நீ யாரு? ஜமீன் வீட்டுப் புள்ள. யோசிக்காம ஆசைப்பட













— ஏ. கோவிந்தன்

லாமா? எதிர்த்து நிக்க ஏலாதவன் காதல் பண்ணா அதுக்கு முடிவு சோகம்தான் தம்பி. ஆகக்கூடி இல்லேன்னு ஆயிடுச்சு. நெனைச்சதெல்லாம் அடைஞ்சு பழகின மனசாச்சே, தாங்குமா? அழுது குமைஞ்சு, புலம்பி உடைஞ்சு அதா அந்த ரூம்பிலே தூக்குப் போட்டுக்கிட்டாரு. ஆசையா வளர்த்த ஒரே மவன் - இந்த பூமிக்கே சிங்கம். பெத்த வயிறுங்க கலங்கிப் போச்சு. இங்கிட்டு இருக்கவே பிடிக்கல்லே. பட்டணம் போயிட்டாக. இதை வித்துரலாம்னுதான் பார்த்தாங்க. ஆனா இம்புட்டுக் காசு யாருகிட்டே இருக்கு? அதான் ஒருத்தரும் வாங்கலே. இப்பம் பட்டணத்துலே வக்கீலுங்க இருக்காக. இங்கிட்டு பளைய ஆளுங்க இருக்கோம். பார்த்துக்கிடறோம். ஆனா அவுக இருக்கச் சொல்ல இப்படி முடியாது."

வளைந்த கிழவன் தொலைவில் வெறித்த பார்வையில் பெருமூச்சு விடுகிறான்.

"எத்தனையோ வருஷம் ஆச்சு. அந்தக் காலமெல்லாம் போச்சு. பெரியவரு மேல் படியிலே வந்து நின்னாருன்னா வேஷங் கட்டி விஸ்வரூபம் எடுத்தாப்பிலே இருக்கும். திண்ணையிலே உட்கார்ந்தா பஞ்சாயத்து. தலையாட்டி எந்திரிச்சிட்டா அதுதான் தீர்ப்பு. எதிர்த்து நிக்க முடியாது. நின்னாலும் நிமிர முடியாது. தெருவிலே செருப்பு போட்டு ஆளுக நடக்க மாட்டாங்க. சாதி விவரம் தெரியாம யாரும் உள்ளாற நுழைய முடியாது. அதுவும் யார் எங்கே வரைக்கும் போலாம்னு நீக்கு போக்கு இருக்கு. தப்பா எடுத்துக்கிடாதீங்க. இப்ப சினிமா ஆளுக எத்தனையோ பேரு வர்றீங்க. செருப்புக் காலோடவே எல்லா இடமும் நடக்கறீங்க. கண்ட எடத்திலே பீடியும் சிகரெட்டும் பிடிச்சு வெத்தலை பாக்கு துப்பறீங்க. உங்க ஆளுங்ககிட்டே சொல்லுங்க. இது மரியாதைப்பட்ட மனுஷங்க வாழ்ந்த இடம். நான் பழைய ஆளு. பலதும் பார்த்த ஆளு. சின்ன ஜமீன்தார் ஆசைப்பட்டார்னு என் பேத்தியவே கொன்னுட்டாங்க. இருந்தாலும் பளகிட்டோம். இதெல்லாம் தப்பு. உங்க ஆளுங்ககிட்டே சொல்லுங்க."

முன்புறம் சேர்ந்து விட்ட கும்பலுக்கு பயந்து, கொல்லைப்புறத்து தோட்டப் பாதையில் சப்தமில்லாமல் கார் வந்து நிற்கிறது. கதாநாயக நடிகர் இதற்குள் கூடி விட்ட அத்தனை கண்களும் பார்க்க, பூமியில் கால் பதிக்கிறார். தொடர்ந்து வேறு காரில் இயக்குனர் இறங்குகிறார். எத்தனையோ காலமாய் கண்டிராத சிநேகிதர்கள் போல் இருவரும் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டு வர

வேற்கிறார்கள். உலகம் அவர்கள் பின்னால் ஓடுகிறது. விஜயகணேசன் சேர்ந்து கொள்கிறான். வாழைத் தோட்டத்தில் கதாநாயகனும் நாயகியும் ஓடிப் பிடித்து விளையாடுகிற காட்சி. எப்படியெல்லாம் எடுத்தால் கிளுகிளுப்பாய் இருக்குமென்று ஒரு படைத் தளபதியின் தீவிரத்துடன் இயக்குனரும் நடிகர்களும் கேமராக்காரரும் விவாதித்துக் கொண்டிருக்க, மற்றவர்களுக்குத் தாங்கள் வேலை செய்கிறதை அவர்கள் பார்க்கிறார்களா என்று பார்க்கிறதே பெரிய வேலையாய் இருக்கிறது.

விவாதத்தின் முடிவில் தீர்மானிக்கப் பட்ட புதிய திரைக்கதை மிகவும் விசித்திரமானது. கதாநாயகன், ஜமீன் வீட்டின் ஒரே மகன். தோள்களை, துவாலையில் போர்த்திக் கொண்டு கைக் கண்ணாடியில் உதட்டுச் சாயம் சரிபார்க்கும் கதாநாயகி, ஜமீன் வீட்டின் சாவிக் கொத்து சுமக்கிறவனின் பேத்தி. யாருக்கும் தெரியாமல் பித்தளை மின்னுகிற கோச்சு வண்டியில், அவிழ்த்து விடப்பட்ட குதிரைகள் வெட்கப்படுகிற அளவுக்கு காதல் என்ற பெயரில் கட்டியணைத்துக் கிடக்கிறதை வண்டியோட்டி பார்த்து விடுகிறான்.

சூரியன் உச்சிக்கு வந்தது தெரியாமல் படப்பிடிப்பு மும்முரமாய்த் தொடர்கிறது. பித்தளை மின்னுகிற வாடகை கோச்சு வண்டி இன்றுடன் திரும்ப வேண்டும். நாளைக்கு வேறு கம்பெனியின் பாடல் காட்சிக்கு அது ஒப்பந்தமாகியிருக்கிறது.

**ம**ரத்தடியில் மதிய உணவு முடிகிறது. வீட்டின் வெவ்வேறு நிலைகளில் ஏறி இறங்கி விஜயகணேசன் வாசலுக்கு வருகிறான். காலம்தான் எப்படியெல்லாம் மாறுகிறது! நாடு சுதந்திரம் அடைந்தது. அடக்குமுறைகள் அழிந்து விட்டன. ஆங்காங்கே தனி நபர்கள் ஆட்சி செலுத்தியது போய் பொதுவான சட்டங்கள் வந்து விட்டன. மரத்தில் கட்டி வைத்து அடிக்கிற சவுக்கு மன்னர்களின் மான்யம் மறைந்தது. இனி எல்லோரும் இந்நாட்டு மன்னர். அரண்மனைக் கதவுகள் அனைவருக்கும் திறந்ததில் திண்ணையில் சாய்ந்து ஜனங்கள் தினத்தந்தி படிக்கிறார்கள். ஜமீன் வீட்டின் சரித்திரம் பூராவும் வெறும் கொச்சைப்படுத்தப்பட்ட திரைக்கதையாகி விட்டது. வெளியே வெளிச்சம் கண்ணைக் கூசுகிறது.

தோட்டத்து இரும்புக் கதவில் சுற்று வட்டார ஜனங்கள் பூராவும் காலையிலிருந்து காத்து நிற்கிறார்கள். கடும் வெயில் ஒரு பொருட்டாய்த் தெரியவில்லை. வியாபாரம் முடித்து விட்ட ஐஸ் வண்டிக்காரர்கள் கூட, நகருவதாய் இல்லை. கையில் தடியுடன் போலீஸ்காரர்கள் கெடுபிடி செய்கிறார்கள். கும்பல், காம்பவுண்ட் சுவர் ஏறி கண்ணாமூச்சி ஆடுகிறது. யாரேனும் உதிரி நடிகர்களாவது தென்படலாகாதா என்ற ஆர்வம், நேரம் செல்லச் செல்ல ஏக்கமாய் பெருக்கெடுக்கிறது. இத்தனை ஜனங்களின் கள்ளம் கபடமில்லாத அன்பைப் பெற்ற சினிமாக்காரர்கள் எத்தனை பாக்கியவான்கள்?

**பி**ற்பகல் படப்பிடிப்பு பூராவும் கொல்லைப்புறம் மற்றும் வீட்டின் மையப் பகுதியிலேயே நடக்கிறது. வண்டியோட்டி, கோச்சு வண்டியில் தான் எட்டிப் பார்த்த விவரத்தை வளைந்த கிழவனிடம் கூறி எச்சரிக்கிறான். 'இந்தக் கல்யாணம் நடக்காது' என்று மாடிப்படி வளைவில் கையில் சவுக்குடன் ஜமீன்தார் உறுமுகிறார். கண்களில் நீர்மல்க மறைவிடத்தில் கதாநாயகனும் நாயகியும் மேலும் கட்டியணைக்கிறார்கள். உஷ்ணம் குறைந்து சூரியன் மேற்கே விழுகிறது. அன்றைய படப்பிடிப்பில் தன் அணில் பங்கு முடித்து விஜயகணேசன் வாசலுக்கு வருகிறான். கருப்புக் கண்ணாடி ஏற்றிய கதாநாயகனின் கார், ஜமீன் வீட்டைச் சுற்றிக் கொண்டு முன் பக்கம் ஜனங்கள் முண்டியடிக்கிற இரும்புக் கதவை நெருங்குகிறது.

"டேய் சுபோதி. கார் கண்ணாடியை இறக்குடா."

காத்துக் கிடந்த ஏக்கம் எரிச்சலாகி, கும்பலின் சார்பாக ஒருவன் கத்துகிறதை கதாநாயக நடிகர் கேட்டு விடுகிறார். கார் நிற்கிறது.

"அவனைப் பிடிங்கடா!"

அடித்தொண்டையில் ஆணை பிறக்கிறது. கும்பலில் பிரிந்து ஓடி, கத்தியவன் தன்னை அடையாளம் காட்டிக் கொள்கிறான். போலீஸ்காரர்களும் படப்பிடிப்புக் குழுவினரும் விசுவாசமாய் அவனைத் துரத்திப் பிடிக்கிறார்கள். தர்ம அடிகளில் மூக்கில் இரத்தக்கோடு வரைந்து, கிழிந்த ஆடைகளில் கெஞ்சல்களையும் மீறி, கத்தியவனை உள்ளே இழுத்துப் போகிறதை அனைவரும் பார்க்கிறார்கள். யாரும் பார்க்காத மறைவில் கதாநாயகன் முன்னிலையில் மேலும் விமரிசைகள் நடக்கிறது. ஜீப்பில் போலீஸ் வந்து, முன்பக்கம் கும்பல் சிதறி ஓடியதில் தெருவே நொடியில் வெறிச்சோடுகிறது.

விழுப்புரம் விஜயகணேசன் அண்ணாந்து பார்க்கிறான்.

ஜமீன் வீடு இப்போதும் அப்படியேதான் இருக்கிறது.

# காசி பில்டர்ஸ் வழங்கும்

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 16-வது குலுக்கல் கடந்த 25.06.95 அன்று நடைபெற்றது. குலுக்கலில் வீடு பெற்ற அதிர்ஷ்டசாலிகளை "காசி பில்டர்ஸ்" நிறுவனம் வாழ்த்துகிறது. குலுக்கலில் வீடு பெற்ற அதிர்ஷ்டசாலிகளின் பெயர்களும், முகவரியும் பின்வருமாறு :

1. பி. எஸ். செங்குட்டுவன், எ.இ. 55, 5-வது தெரு, 10-வது பிரதான சாலை, அண்ணா நகர், சென்னை -40.
ரூ. 2,500/- 'சி' குரூப்

2. என். சோமசுந்தரம், 164/4, 4-வது பிரதான சாலை, சதாசிவ நகர், மடிப்பாக்கம், சென்னை - 91.
ரூ. 1,500/- 'டி' குரூப்

3. பி. செல்வகுமார், நெ. 87, புதுத்தெரு, திருவாரூர், தஞ்சாவூர் - 610 002.
ரூ. 1,500/- 'சி' குரூப்

4. டாக்டர் திருமதி நளினிஸ்ரீதரன், நெ. 6, சோமு சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14.
ரூ. 3,000/- 'பி' குரூப்

5. திருமதி. ஜெயமதிஷர்மா, கே.வி.வி.எஸ்.என். மத்திய பள்ளி, வாயுசேனா நகர், நாக்பூர் - 440 007.
ரூ. 2,250/- 'ஏ' குரூப்

6. எம். சி. எட்வர்ட் ஜோசப், திருவள்ளுவர் ரோடு, கங்குவார்சத்திரம், செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம்.
ரூ. 4500/- 'ஏ' குரூப்

7. வி. கோசலசோமன், 191/1, எம்.டி.எச். சாலை, ஆவடி, சென்னை - 54.
ரூ. 1,500/- 'எப்' குரூப்

8. திருமதி. ராஜு-சங்கர், 9, ஏரிக்கரை தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.
ரூ. 1500/- 'பி' குரூப்

9. சி. செந்தூரவேலன், நெ. 15, அகத்தியர் தெரு, திருவள்ளுவர் நகர், ஆதம்பாக்கம், சென்னை.
ரூ. 3500/- 'ஏ' குரூப்

10. ஜி. எஸ். மணி, எம்.பி. 37/பி, டிக்னாபாட், போர்ட்பிளேர், அந்தமான்.
ரூ. 1250/- 'ஏ' குரூப்

11. கே. பாண்டுரங்கன், ஜே. 34, பாரதிதாசன் தெரு, திருநகர், சென்னை - 95.
ரூ. 3000/- 'ஏ' குரூப்

12. ஜி. கேசவன். நெ. 32, இரண்டாவது குறுக்குத் தெரு, கிழக்கு சி.ஐ.டி. நகர், சென்னை - 35.
ரூ. 2000/- 'பி' குரூப்

13. எஸ்வி. நடராஜன், நெ. 10, மதுரை மீனாட்சி அபார்ட்மெண்ட்ஸ், 12, வி.பி. கோயில் தெரு, குமரன் காலனி, வடபழனி, சென்னை - 26.
ரூ. 2000 'ஏ' குரூப்

14. எஸ். சந்தான்பேகம், 18, 5-வது தெரு, கணபதிபுரம் காலனி, பரங்கிமலை, சென்னை - 16,
ரூ. 1000 'பி' குரூப்

15. கே. செல்வராஜ், 73-பி, அண்ணா நகர், திருத்துறைப்பூண்டி - 614 713.
ரூ. 1750 'ஏ' குரூப்

16. கே. ஷகிலா, 'எஸ்' பிளாக், 74, அண்ணாநகர், சென்னை - 40.
ரூ. 2500 'டி' குரூப்

17. வி. மோகன், 25, பிள்ளையார் கோயில் தெரு, வடபழனி, சென்னை - 26.
ரூ. 2500 'ஏ' குரூப்

18. எஸ். லட்சுமி, நெ. 14, பாரதி அவின்யூ, அசோக் நகர், அரும்பாக்கம், சென்னை - 106.
ரூ. 1750 'பி' குரூப்

---

**"காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்"** திட்டத்தில் ரூ. 1,500/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி 300 முதல் 1000 சதுரடிகள் வரை உள்ள வீடுகளை குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல் செலுத்தலாம். இத் திட்டத்தில் 10.7.95-க்குள் வீடு பதிவு செய்பவர்களுக்கு முதல் தவணைத் தொகையில் 50% சிறப்புத் தள்ளுபடி வழங்கப்படும்.

**வீடு கிடைக்கும் இடங்கள் :** சென்னை கே.கே. நகர் (மேற்கு), விருகம்பாக்கம், வடபழனி, சாலிகிராமம், போரூர், நங்கநல்லூர், பல்லாவரம் (இரயில் நிலையம் அருகில்), வளசரவாக்கம், கோடம்பாக்கம் (ரெங்கராஜபுரம் மெயின் ரோடு) ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

*மேலும் விவரங்களுக்கு :*

## காசி பில்டர்ஸ் மற்றும்
## காசி ஹவுஸிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்

**காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,**
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை,
அசோக் நகர், சென்னை - 600 083.
போன் : 4822206, 4821969, 4825606, 4825506 FAX : 044-4822206
கிளை அலுவலகம் : நெ. 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை,
சென்னை - 600 015, போன் : 456464

---

ஞாயிறு முழு நேர அலுவலகம் உண்டு

வி. கோபாலன்

## தவிர்ப்போம் தவணைகளை!

சென்னை போலீஸ் கமிஷனர் சமீபத்தில் ஓர் எச்சரிக்கை அறிக்கை வெளியிட்டார். "நகரில் 'கௌரவ'க் கொள்ளைகள் அதிகரித்து வருகின்றன. எக்கச்சக்கமாக வட்டி தருவதாகச் சொல்லி விளம்பரம் செய்யும் பல ஃபைனான்ஸ் கம்பெனிகள் இரவோடு இரவாகக் காணாமல் போய்விடுகின்றன! ஆகையால் பொதுமக்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்" என்பதே அந்த அறிக்கை. இந்தக் கட்டுரைத் தொடரில் நாம் ஏற்கெனவே செய்த எச்சரிக்கையை வலியுறுத்துவது போல் உள்ளது கமிஷனரின் அறிக்கை.

இந்தக் கட்டத்தில் இன்னொரு விஷயம் குறித்தும் வாசகர்களை எச்சரிக்க வேண்டியுள்ளது. 'ஹயர் பர்சேஸ்' அல்லது தவணை முறையில் ஒரு பொருளை வாங்குதல் குறித்து இந்த எச்சரிக்கை. வாழ்க்கையில் 'லக்ஷுரி ஐட்டம்'களாக இருந்த பொருள்களெல்லாம் ஏறத்தாழ 'இன்றியமையாதவை' என்ற நிலை இப்போது வந்துவிட்டது. ஃப்ரிட்ஜ், மிக்ஸி, கிரைண்டர், வாஷிங்மெஷின் எல்லாமே நடுத்தர வர்க்கத் தேவைகளாகிவிட்டன. இவற்றைத் தவணையில் வாங்குவது சுலபம்தான் என்றாலும் தவணைகளுக்கான வட்டி விகிதத்தைக் கணக்கிடும் போது 'ஷாக்' அடிக்கிறது. தவணை மூலம் வாங்கும் பொருளுக்கு ஆகும் கூடுதல் விலையைக் கணக்கிட்டால், அது ஆண்டொன்றுக்குச் சுமார் 25 - 30 சதவிகிதம் வட்டி செலுத்துவதற்குச் சமமாக அமைகிறது! ஆக, பதினைந்தாயிரம் ரூபாய் பெறுமான முள்ள ஃப்ரிட்ஜ் ஒன்றைத் தவணையில் வாங்கினால் வட்டி மட்டும் 3500 முதல் 4500 ரூபாய் வரை ஆகும்! அந்தப் பணத்தை மிச்சம் பிடித்தால் ஒரு மிக்ஸி வாங்கிவிடலாமே!



பல கம்பெனிகளில் தவணைகளைத் திருப்பிச் செலுத்த செலுத்த, வட்டித் தொகையை அதற்கேற்றபடி குறைப்பதுமில்லை. மேலும், நாம் வாங்கிய பொருள்களின் மதிப்பும் குறைந்து கொண்டே வரும். இதையெல்லாம் தவிர்க்க, தவணை பக்கம் தலை வைக்காமல் இருப்பதே நல்லது.

விதி விலக்காகச் சிலவற்றைத் தவணையில் வாங்கலாம்! வீடு, ஃப்ளாட், மனை போன்றவற்றை இந்த முறையில் வாங்கினாலும் பாதிப்பு இல்லை. அசையா சொத்து ஒன்று நமது உரிமை ஆகிறது. பிற்பாடு அதன் மதிப்பு உயருமேயொழிய குறையாது!

வருமான வரி செலுத்துவோருக்கு ஏற்ற ஒரு முதலீடு, ரிசர்வ் வங்கி வழங்கி வரும் Tax Free Relief Bond. இந்த 'பாண்டு'களில் முதலீடு செய்தால் ஒன்பது சதவிகிதம் வட்டி கிடைக்கும். வட்டிக்கு முழு வருமான வரி விலக்கு உண்டு. தவிர, ஐந்து லட்சம் ரூபாய் வரையிலான முதலீட்டுக்குச் சொத்து வரியிலிருந்தும் விலக்கு உண்டு. இந்த பாண்டுகளை (ரூபாய் ஐந்து லட்சம் மதிப்பு வரை) பிறருக்குப் பரிசாக அளித்தாலும் gift tax இலிருந்து விலக்கு உண்டு. இந்த பாண்டுகளைப் பரிசாகப் பெற்றவர் இதையே மீண்டும் வேறொருவருக்குப் பரிசளித்து வரிவிலக்கு பெற முடியாது. மிக அதிகமாக வருமான வரி செலுத்திக் கொண்டிருப்பவர்கள் இந்த பாண்டுகளில் முதலீடு செய்வது குறித்து யோசிக்கலாம்.

(பணம் பெருகும்)

# Kalki Shopping Page



## SREE KRISHNA

**CUT PIECE COLLECTION PVT. LTD.**

**THE SHOP FOR WHOLE FAMILY**

**39 GODOWN STREET.**
**MADRAS -1 PH. 589596**

(WHOLE SALE DIVISION FOR CUT-PIECES & SAREES
MANUFACTURER -
WHOLE SALER - RETAILER
AVAILABLE AT EX-MILL PRICES)

**EXCLUSIVE MATCHING BLOUSES**

specialists in suiting, shirtings, cut-pieces, summer cotton sarees, madurai chungudi cotton, belgaum pattu silks, benaras silks, venkatagiri bengal cotton and churidar.

## பத்மஸ்ரீ பேர்ல்ஸ்

வழங்கும் மகத்தான சலுகை!

உங்களுடைய பிறந்த தேதியும், ஜன்ம நட்சத்திரங்களை வைத்து நாங்களே உங்களுக்கு ஏற்ற அதிர்ஷ்டக்கல்லை தேர்ந்தெடுத்து அதை வெள்ளி மோதிரத்தில் பதித்து தருகிறோம்.

நீங்கள் அந்தக் கல்லை தங்க மோதிரத்தில் பதித்துக் கொள்ள விரும்பினால் ஆர்டரின் பேரில் செய்கூலி இன்றி செய்து தரப்படும்.

மற்றும் எங்களிடம் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ள அனைத்துக்கும் **20%** சிறப்புத் தள்ளுபடியும் உண்டு.

**பத்மஸ்ரீ பேர்ல்ஸ்**

(முத்துக்கள் மற்றும் தரம்மிக்க கல் விற்பனையாளர்)
53, வடக்கு உஸ்மான் சாலை,
(A.R.R. காம்ப்ளக்ஸ் எதிரில்)
தி. நகர், சென்னை - 600 017.
பத்மஸ்ரீ பேர்ல்ஸ்,
எம்.ஜி. ரோடு, செகந்திராபாத்.

## பென்ஷனர் பாதுகாப்புத் திட்டம்

பிக்சட் டெபாசிட்ஸ்

வட்டி **36%**

டெபாசிட் செய்யும் தேதியன்றே மாத வட்டிக்கும் அசல் ரீபண்டிற்கும் செக் தருகின்றோம். டெபாசிட்டுகள், கம்பெனி சொத்தின் மீதான தொடர் உரிமையால் பாதுகாக்கப்படுகின்றன.

**பெஸ்ட் பெனிபிட் அண்ட் கேரண்டி பண்ட் டிரஸ்ட்**

Regd. (Estd 1979)
3வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ்,
26, ரங்கநாதன் தெரு, T. நகர்,
சென்னை - 600 017.
போன் : ஆபீஸ் : 4348560 வீடு : 434 7025.

Prof :V.VIVEKANAND
Formerly I.A.S.
Managing Director

Dr.PARAMESWARI,
M.B.B.S.
Chairman.

KOMALA ADS.

# Kalki Shopping Page



ADYAR

## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC & MANUAL TYPING
BINDING & LAMINATION

## RANI SAREES

CHECK THE CLOTH LABEL AND PURCHASE

## BENGAL COTTON SAREES

BEST QUALITY ATTRACTIVE DESIGNS AND COLOURS
10% DISCOUNT ON BENGAL COTTON ONLY.
AVAILABLE ON WHOLE SALE ALSO

**MADURAI TEXTILES**
2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZZAR,
MADRAS-17.
(Nearer to Vegetable Market)

புருஷேஷு ராமா : புஷ்பேஷு ரோஜா, நாரீஷு ரம்பா : நகரேஷு காஞ்சி

## நடராஜ் எஸ்டேட்ஸ்

TEMPLE CITY OF INDIA - என்று
புகழப்படும் காஞ்சி நகருக்கு அருகில்,
பெங்களூர் -சென்னை நெடுஞ்சாலையை ஒட்டி
**2 கிரவுண்ட் - 4800 ச. அடி** நிலபரப்பில் -
10 தேக்கு மரங்களுடன்

**அழகிய காட்டேஜ்**

❑ மற்றும் தென்னை, மா, பலா, வாழை, கொய்யா, மாதுளை, சப்போட்டா, எலுமிச்சை, வாழை, காய்கறிகள், பூஞ்செடிகள் - மேலும் பொழுது போக்கும் வசதிகளுடன் தயாராகிறது. ❑ உங்கள் குடும்பத்துக்குத் தேவையான பூக்கள், காய்கள், பழங்கள், - ஆகியவற்றை 5 ஆண்டு காலத்துக்கு விளைவித்தும், பராமரித்தும் தருகிறோம்.

மாதத் தவணை : ரூ.1000, ரூ.2000, ரூ.5000 - மொத்தமாக பணம் செலுத்துபவர்களுக்கு 10% விலை குறைப்பு உண்டு.

**Phone : 4342098, 4840150**



**NATARAJ ESTATES** (Farm House Promoters)
"Shanthi Complex" 3rd Floor, 26, Ranganathan Street, T. Nagar,
Madras - 600 017. B.O. Kancheepuram - 631 501
Tanjore Office : 2-B, Selvam Nagar, T.P.S. Bus Stop,
Medical College Road, Thanjavur - 613 007.



NATARAJ GROUP OF COMPANIES :
NATARAJ FINANCE, NATARAJ CHITS (TAMIL NADU) PVT. LTD.,
NATARAJ EXPORTS OVERSEAS, NATARAJ OIL MILLS,
NATARAJ PUBLICATIONS.

## ரூ. 20 பரிசுக் கடிதம்

**● 'ஒரு நோயாளியின் உயிரைக் காப்பது மட்டுமல்ல, ஒரு டாக்டரின் கடமை! நோயாளியின் வாழ்க்கையையும் பாதிக்கக் கூடிய ரகசியத் தைக் கூட டாக்டர் வெளியே விடக்கூடாது' என்ற கருத்தில் எழுதிய ராஜேஷ்குமாரின் "உண்மைகள் உறங்கட்டும்" சிறுகதை டாப்!**

**கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.**

---

● சட்டக் கல்லூரி பற்றிய கட்டுரை படித்தேன். ஒருமுறை சட்டக் கல்லூரி மாணவன் என்று கூறாதபோது எனக்கு போலீஸாரிடம் ஏற்பட்ட அனுபவங்கள் விவரிக்கத் தகாத அளவுக்குக் கொடுமையானவை. (தவறான இடத்தில் ஸ்கூட்டர் நிறுத்தியதாகக் குற்றச்சாட்டு) சட்டக் கல்லூரி மாணவன் என்று தெரிந்த பிறகு, "இதை முன்னமேயே சொல்லியிருக்கக் கூடாதா?" என்று கேட்டார்கள்! பின்னர் போலீஸ் கமிஷனரிடமும் புகார் எழுதிக் கொடுத்துவிட்டு வந்தேன். இம்மாதிரி போலீஸார் நடந்து கொள்ளக் காரணம் இத்துறையில் உள்ளோரிடம் மரியாதையால் அல்ல; ஓர் அமைப்பாக நின்று போராடும் வல்லமை இக் கல்லூரி மாணவருக்கு இருப்பதே என்று கருதுகிறேன். இந்த வல்லமை இல்லாத சாதாரண பொதுமக்களின் கதியை நினைத்துப் பார்த்தால் பயங்கரமாயிருக்கிறது.

சென்னை - 10, நா. சீனிவாசன்.

● நிஜமான புரட்சித் தலைவியை தராக அடையாளம் காட்டிய விதம் புல்லரித்தது சார்!

மதுரை - 16, எல். மீனாட்சிசுந்தரம்.

● ஏனுங்க, 'வில்லாதி வில்லன்' படம் பாத்துப் போட்டு, அதுல ராதிகா பத்தி ஒண்ணுமே சொல்லிப் போடலீங்களே... இது நியாயமுங்களா...?

திருவாரூர், எஸ். சேகர்.

● சிலம்புச் செல்வரின் 90-வது பிறந்தநாள் நிகழ்ச்சி தொடர்பாக கல்கி கார்ட்டூன் பார்த்தேன். "காங்கிரஸ் புறக்கணிப்பு" என்று கார்ட்டூன் சுட்டிக்காட்டுகிறது. தமிழகத்தில் காங்கிரஸ் என்று ஒன்று இருக்கிறதா? இருந்தாலும் தங்கள் முன்னோடிகளைப் பற்றி நினைத்துப் பார்க்க அவர்களுக்கு நேரம் எங்கே? ம.பொ.சி. —"கல்கி" நீண்ட நாளைய தொடர்பை நினைவுகூர்ந்து, கல்கியாவது சற்று உயர்வாக அவரது 90-வது பிறந்தநாளைச் சிறப்பித்திருக்கலாமே!

கோவை, சீனி. மகாலிங்கள்.

● சென்னைக்குக் குடிநீர் வருகிறதோ இல்லையோ, பலப்பல திட்டங்கள் தீட்டப்பட்டு மக்களின் வரிப்பணம் ஒவ்வோர் ஆட்சியின் போதும் வீணடிக்கப்பட்டு வருகிறது என்பதே உண்மை.

சென்னை - 48, அம்பி தம்பி.

● "ஹலோ! கல்கியா... வணக்கம், ஹி... ஹி... இந்த வாரம் படிச்சேன். டெலிபோன்ல பேசற தைப் பத்தி ரொம்ப அழகா சொல்லியிருந்தீங்க. கொங்குத் தமிழ்ல வில்லாதி வில்லன் விமர் சனம் அழகா பண்ணியிருந்தீங்க. தராக எல்லாக் கேள்விகளுக்கும் நல்லா பதில் சொல்லி அசத்தியிருந்தாரு. அப்புறம் இந்த 'மாறும் முகங்கள்' சிறுகதைக்கு ராமு வரைஞ்சிருந்த நாலு கண் ஓவியம் ரொம்ப சூப்பரு. சிறுகதைகள் ரொம்ப நல்லாவே இருந்துச்சு. வீராணம் திட்டம் பத்தி நீங்க எழுதுன கட்டுரை அசத்தல் போங்க. கடைசிலதான் அட்டையைப் பார்த்தேன். அறுக்காதீங்கன்னு சொல்லிட்டீங்க.

# புல்லரிக்க வைத்த புரட்சித்தலைவி!

வைச்சுடவா? ஹி.... ஹி...!"

இராமேஸ்வரம், மு. முருகேசன்.

● டெலிபோனை இளைஞியின் கையில் கொடுத்தீரே? ஏன் என்னைப் போன்ற அழகான(?!) இளைஞர்கள் கையில் கொடுக்கக் கூடாதா? ஆண் பாவம் பொல்லாதது சார்!

சென்னை - 91, என். கார்த்திகேயன்.

● இராஜேஷ்குமார் நாவல்லதான் "சூப்பர் ஸ்டார்"னு நினைச்ச நினைப்ப, நாலு பக்க சிறுகதையிலும் அவர்தான் "சூப்பர் ஸ்டார்"னு தெளிவுபடுத்திட்டாரு.

விழுப்புரம், வை. சண்முகவேல்.

**● கிறிஸ்துவர்களில் சில பிரிவினர் பலதார மணம் செய்து கொள்கிறார்கள் என்று நான் பேட்டி கொடுத்ததாக கல்கியில் பிரசுரமாகியிருப்பது (4.6.95) தவறாகும். நான் அப்படிச் சொல்லவில்லை. கிறிஸ்துவர்களில் சிலர் விவாகரத்து நீதி மன்றங்களுக்குப் போகாமல் அவர்களுக்குள்ளேயே மதச் சட்டப்படி, Canon Law பிரகாரம் பைசல் செய்து கொள்கிறார்கள் என்றுதான் சொன்னேனே தவிர பலதார மணங்கள் அவர்களுக்கு உண்டு என்று கூறவில்லை.**

**சென்னை - 40, கிருஷ்ணசாமி ரெட்டி.**

**I AM A GREAT FRIEND TO PUBLIC AMUSEMENTS, FOR THEY KEEP PEOPLE FROM VICE.**

**- DR. SAMUEL JOHNSON -**

இயக்குநர் பாலசந்தருக்கும் தயாரிப்பாளர் பாலசந்தருக்குமிடையே ஏன் இவ்வளவு முரண்பாடுகள் என்று சிலர் என்னிடம் வாதாடுவார்கள். நான் தயாரித்த சில 'மசாலா' படங்களை மனத்தில் கொண்டு கேட்கப்படுகின்ற கேள்வி இது!

எவை மசாலாப் படங்கள்?

மனத்திற்கு இதமான இசையும் நல்ல பாடல்களும் இளமைத் துடிப்புள்ள காதல் காட்சிகளும் இருந்து விட்டால் அவை மசாலாப் படங்களா? மரோசரித்ராவும், 'ரோஜா' வும் மசாலாப் படங்களா?

அப்படியே இருந்தாலும் மசாலாப் படங்கள் பண்ணுவது ஒன்றும் பாவ காரியமில்லை.

இரண்டு அல்லது இரண்டரை மணி நேரம் பொது மக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகின்ற எந்த ஒரு திரைப் படமும் 'மசாலா'ப் படம் என்று கருதப்பட்டால் அப்படி படம் எடுக்கத் தெரிந்தவர்கள் உண்மையிலேயே பெருமைப் பட்டுக் கொள்ளலாம். ஆகவே வர்த்தக ரீதியாக வெற்றி பெற்ற படங்கள் எல்லாம் பாவப்பட்ட படங்கள் அல்ல.

எம்.ஜி.ஆர். நடித்த திரைப் படங்களையெல்லாம் எடுத்து அலசிப் பார்க்கலாம். அவை அனைத்துமே மசாலாப் படங்கள்தாம். மக்களுக்குப் பிடிக்கும் படியான நல்ல நல்ல அம்சங்களைத் தமது படங்களிலே வைத்து, வெகுஜனரீதியாக 98 சதவிகித மக்கள் ஒப்புக் கொள்ளும்படியான திரைப்படங்களை எடுத்து மக்கள் திலகம் என்கிற புகழையும் மக்களின் அபிமானத்தையும் எம்.ஜி.ஆர். பெற்றார்.

ஒரு தயாரிப்பாளர் என்கிற வகையிலே எனது தயாரிப்பில் வெளிவருகின்ற படங்களுக்கு நான் அமைத்துக் கொண்ட அளவுகோல் ஒன்று உண்டு.

MGM நிறுவனத்தின் அதிபர் Meyer சொன்னார் :

"I will only make films that I won't be ashamed to have my children see."

இதே அளவுகோலைத்தான் நானும் கடைப்பிடித்து வந்திருக்கிறேன்.

ஆனால் ஒரு இயக்குநர் என்கிற முறையிலே விதவிதமான புரட்சிக் கருத்துக்களையும் off beat themeகளையும் நல்ல ரசனையுடனும் அதே நேரத்தில் வியாபார ரீதியில் பாதிக்கப்படாமலும் ஒரு ஃபார்முலாவை அமைத்துக் கொண்டு அந்த வட்டத்திற்குள்ளே செயல்பட்டு வந்திருக்கிறேன்.



• கல்யாண அகதிகள் (படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்)

Every film should be different from the earlier one என்பதிலே அதிகம் அக்கறை செலுத்தி வந்திருக்கிறேன். ஆனால் அப்படிப்பட்ட சில படங்கள் மேல்மட்ட ரசிகர்களை மட்டுமே திருப்தி செய்யக்கூடியதாக இருந்து வந்திருக்கிறது. இதைத் தவிர்ப்பதற்காகத்தான்

# நினைவலைகள்

நான் ஒரு காலகட்டத்திற்குப் பிறகு இரண்டு அங்கமாகப் பிரிந்து கொண்டேன். ஒன்று இயக்குநர்... இன்னொன்று தயாரிப்பாளன்.

நானே தயாரிப்பாளன் ஆக வேண்டுமென்று முடிவெடுத்ததற்குக் காரணம், பரீட்சார்த்த முறையில் எடுக்க நினைக்கும் சில படங்களை மற்றவர்கள் பணத்தில், பிற தயாரிப்பாளர்களை வைத்து எடுத்து அவர்களுக்கு நஷ்டத்தைத் தேடித் தரக் கூடாது என்கின்ற நோக்கத்தில்தான்.

வியாபார ரீதியாக நன்றாக ஓடக்கூடிய படங்களைத் தயாரித்து, ஒரு நல்ல bannerஐ உருவாக்கி விட்டு, பிறகு அந்தப் படங்களின் வியாபார பலத்தில், என் சொந்த விருப்பத்திற்கிணங்க சில படங்களைத் தயாரிக்கலாம் என்கிற எண்ணத்தின் அடிப்படையில்தான் எனது 'கவிதாலயா' நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது.

ஆனால், அப்படிப்பட்ட முற்றிலும் வர்த்தகரீதியான திரைப்படங்களை என்னால் முழுமையான ஈடுபாட்டுடன் எடுக்க முடியாது என்கிற காரணத்தினால், வர்த்தகரீதிப் படங்களை எடுப்பதில் தனித் திறமையுள்ளவர்களை இயக்குநர்களாக அமைத்துக் கொண்டு கவிதாலயா நிறுவனம் செயல்படத் தொடங்கியது. அந்த வகையிலேதான் என் மதிப்பிற்குரிய நண்பர் முத்துராமன் பல வெற்றிப் படங்களை கவிதாலயாவுக்காக இயக்கித் தந்தார். எனது ஏகலைவனாக இருக்கும் விசு சில வெற்றிப் படங்களை இயக்கித் தந்தார். ஒரு விஷயத்தில் மட்டும் நான் ஜாக் கிரதையாக இருப்பேன்.

All said and done, திரைப்படம் எனப்படுவது ஒரு இயக்குநரின் தனிப்பட்ட படைப்பு. நானே ஒரு இயக்குநராக இருந்தாலும் வேறு இயக்குநர்களின் பொறுப்பில் விடப்பட்ட படங்களின் எந்த விஷயத்திலும் நான் அனாவசியமாகக் குறுக்கிடுவது கிடையாது. அவரவர்களின் தனிப்பட்ட ரசனைக்கும் செயல்பாட்டிற்கும் விட்டு விட வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பேன்.

**கே. பாலசந்தர்**

கதையை மட்டும் மேலோட்டமாகக் கேட்டுத் தெரிந்து கொள்வேனே தவிர, அவர்களது திரைக்கதையமைப்பிலோ அல்லது அவர்களின் narration பாணியிலோ நான் கொஞ்சமும் தலையிடுவதில்லை. தயாரிப்புக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து தருவது மட்டுமே எனது பொறுப்பு.

திரு. விசு அவர்களை இயக்குநராக அறிமுகம் செய்த பெருமை எனக்கும் எனது கவிதாலயா நிறுவனத்திற்கும் உண்டு. அந்தப் படம் 'மணல்கயிறு' வெளிவந்ததும் பின்னால் அது மிகப் பெரிய வெற்றி பெற்றதும் ஒரு நல்ல குடும்பப் பட இயக்குநர் என்கிற புகழை விசு இந்தப் படத்தின் மூலம் தக்க வைத்துக் கொண்டதும் எல்லோரும் அறிவார்கள்.

பாலசந்தருடைய நிறுவனம் தயாரித்த படம் என்பதாலேயே சில விமர்சகர்கள் 'மணல் கயிறு' படத்தில் பாலசந்தருடைய contribution நிறைய இடங்களில் தென்படுகிறது என்கிற மாதிரி அபிப்பிராயப்பட்டார்கள்.

படத்தின் 100வது நாள் விழாவின் போது மேடையில் நான் பேசினேன்.

"இந்தத் திரைப்படத்திற்கு 'மணல்கயிறு' என்கிற தலைப்பைக் கொடுத்ததைத் தவிர நான் எந்த வகையிலும் இதன் வெற்றிக்குக் காரணமாக இருந்ததில்லை. வெற்றியின் நூறு சதவிகிதப் பங்கும் விசு அவர்களையே சேரும்" என்றேன்.

நான் இயக்கித் தயாரிக்கின்ற படங்களில் செலவினங்களைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டு விநியோகஸ்தர்களுக்கும் லாபம் கிடைக்கிற வகையில் பணிபுரிந்து வருகிறேன். பரீட்சார்த்தமாக எடுக்கிற சில படங்கள் சில நேரங்களில் வியாபார ரீதியிலும் வெற்றி பெறுகின்றன. பெரிய படங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது லாப விகிதாசாரத்தில் வித்தியாசங்கள் இருக்கலாம். 5 லட்சம் கொடுத்து விநியோகஸ்தர்கள் வாங்குகின்ற சின்ன திரைப்படங்கள் 6 லட்சம் சம்பாதித்துக் கொடுக்கும் லாபத்திற்கும் 15 லட்ச ரூபாய் கொடுத்து வாங்குகின்ற பெரிய படங்கள் 16 லட்சம் ரூபாய் வசூல்

செய்து அதே ஒரு லட்ச ரூபாய் லாபத்தை மட்டும் ஈட்டித் தரும் போது எந்தப் படம் மிகவும் லாபகரமான படம் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஒரு இயக்குநராகவும் தயாரிப்பாளனாகவும் இரட்டைப் பொறுப்புகளோடு நான் பணிபுரிவது, ஆத்மதிருப்தியைத் தருகின்ற வகையிலும் பொருளாதார ரீதியில் ஒரு நல்ல சமநிலையையும் ஏற்படுத்திக் கொடுக்கிறது.

எந்தப் படம் எடுத்தாலும் அது எனக்கு total satisfaction தர வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். 'பொய்க்கால் குதிரை' திரைப் படம் கூட எனக்கு முழு மனநிறைவைக் கொடுத்த படம். ரசிகர்கள் இப்படிப்பட்ட முழு நேர காமெடி படத்தை என்னிடமிருந்து எதிர்பார்க்கவில்லை என்பதும் அதனால் அந்தப் படம் தோல்வியுற்றது என்பதும் வேறு விஷயம்.

'கல்யாண அகதிகள்' என்று ஒரு படம் எடுத்தேன். எட்டுப் பெண்கள்; பல்வேறு திருமணப் பிரச்னைகளால் கல்யாண அகதிகள் ஆக்கப்பட்டவர்கள். ஒருத்தி கணவனின் துன்புறுத்தலை விட்டு ஓடி வந்தவள். இன்னொருத்தி வரதட்சணைக் கொடுமைக்குப் பயந்து ஓடி வந்தவள்; ஒருத்தி வாழா வெட்டி, ஒருத்தி divorcee; இன்னொருத்தி விதவை. இப்படிப்பட்ட பல்வேறு தாக்கங்களால் அகதிகள் ஆக்கப்பட்டு ஒரே இடத்தில் ஒன்று கூடி தங்கள் வாழ்க்கையை ஒரு கூட்டுக் குடும்பமாக அமைத்துக் கொண்டவர்கள்.

Under current கனமான விஷயமாக இருந்தாலும் இதை ஹாஸ்யமான முறையில் treat பண்ணியிருந்தேன். இதுவும் ஒரு பரீட்சார்த்தமான முறைதான். ஆனால் படம் தோல்வியுற்றது. தோல்விக்கு என்னவெல்லாமோ காரணம் சொன்னார்கள்.

'அம்முலு' என்கிற கதாபாத்திரம், கிருஸ்துவ மதத்தைச் சேர்ந்த ஒரு ஆடவனை நேசிக்கத் தொடங்குகிறாள். திருமணம் என்று வரும் போது காதலனுடைய பெற்றோர்கள் இவளை கிருஸ்துவ மதத்திற்கு மாறச் சொல்கிறார்கள்.

அதை ஏற்றுக் கொள்ள முடியாத அவள் திருமணத்தைத் துறந்து விட்டு மீண்டும் கல்யாண அகதிகள் முகாமுக்கே வந்து சேருகிறாள்.

"காதல் என்பது தெய்வீகம்; அதைவிட உயர்ந்தது எதுவுமில்லை; மதம் மாற வேண்டுமென்பதற்காக ஒரு பெண் காதலைத் துறந்து விட்டு மீண்டும் அகதியாக வருவதை ரசிகர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. இதுதான் தோல்விக்கு அடிப்படைக் காரணம்'' என்றார்கள் சிலர்.

நான் ஒப்புக் கொள்ளவில்லை.

எதைவிட எது உயர்ந்தது என்பதல்ல என் திரைப்படத்தின் நோக்கம்.

இப்படி வெவ்வேறு மதத்தைச் சேர்ந்த ஆணும் பெண்ணும் நேசிக்க முற்படும் போது ஒரே மதத்திற்கு சிலர் மாறலாம்; இருவரும் தங்கள் தங்கள் மதங்களையே துறந்து விட்டு திருமணத்தில் ஒன்று கூடலாம்;

இதில் எது சரி, எது சரியில்லையென்பதெல்லாம் ஒவ்வொருவருடைய attitudeஐப் பொறுத்தது. மதமாற்றம் தன் மீது திணிக்கப்படும் போது, தனி மனித உரிமையை விட்டுக் கொடுக்க விரும்பாத ஒரு பெண் காதலையே துறப்பதற்குத் தயாராக இருப்பது நடக்கக் கூடாத காரியமல்ல.

இதுவும் ஒரு பெண்ணுரிமை விஷயம் தானே!

Love may be divine
It is not ultimate.

காதலைப் பற்றி பலர் பலவிதமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

''வெற்றியடையும் எந்தக் காதலும் வெறும் இல்லறத்தில் முடிகிறது; தோல்வியடையும் காதல் தெய்வீகமாகிப் புனிதமாகிறது.''

"திருமணத்தில் முடிவது மட்டுமே காதலின் வெற்றி என்பதில்லை; என்னென்ன தடைக் கற்களைக் காதலர்கள் தாண்டி வெல்கிறார்கள் என்பதில்தான் காதலின் வெற்றி இருக்கிறது."

"Love is Blind
But marriage restores its sight."

"காதல், தந்தையின் நோக்கில் Infatuation
தாயின் பார்வையில் ஒரு Solution
காதலர்களின் பார்வையில் Ultimate."

ஆகவே, 'காதல்' என்கிற வார்த்தைக்கு பல அர்த்தங்கள் இருக்கின்றன என்பது மட்டும் நமக்குப் புரிகிறது.

(தொடரும்)



''அவசர அவசரமா ஊருல உள்ள வீடுகளை வாங்காதீங்கன்னு சொன்னேனே கேட்டீங்களா?''

''என்ன ஆச்சு?''

''ஏற்கெனவே நாம வாங்கிய வீட்டையே திரும்பவும் நம்மகிட்ட வித்திருக்காங்க!''

- வளர்மதி ஆசைத்தம்பி

# ''இப்போதைக்கு நோ! கமல் மறுத்தார்!''



• இவர்கள் வித்தியாசமானவர்கள்

இந்த வருடம் தேசிய விருது பெற்றுள்ள 'மோகமுள்' திரைப்படம் பற்றி நிறைய பேசியாகிவிட்டது. அதன் தயாரிப்பாளர் ஜானகிராம னைத் தெரியுமா உங்களுக்கு? மிக வித்தியாசமான மனிதர். தொடர்ந்து ஆர்ட் பிலிம்களாக அலுக்காமல் எடுத்துக் கொண்டிருப்பவர். இவரது முதல் படத்தில் உதவி இயக்குந ராகப் பணியாற்றிய ஒரு வர் இன்று மிகப் பிரபல இயக்குநர். இவ்வாண்டு விருது பெற்றவரும் கூட!

ஜானகிராமனைச் சந்தியுங்கள்.



• தாகம்

''காந்தி கிராமத்து அனாதை இல்லம் ஒன் றில் வசிக்கும் ஒரு பார் வையற்ற இளைஞனுக் கும் யுவதிக்கும் காதல். திரு மணத்துக்குப்பின் ஆசிரம விதிகளின்படி இருவரும் வெளியேற, ஏராள சங்கடங்கள், சந்தேகங்கள், அலைக்கழிப்புகள். உருக்கமான க்ளைமேக்ஸ். முத்துராமனும் ஒரு வங்காள நடிகையும் நடித்திருந்த 'தாகம்' எனது முதல் படம். முற்றிலும் திரைக் கல்லூரி மாணவர்களைக் கொண்டு எடுத்தேன். இதில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவெனில் ஃபிலிம் ஃபைனான்ஸ் கார்ப்பரேஷன் கடனுதவி பெற்று படம் எடுத்து, கடனை முழுமையாகத் திருப்பிச் செலுத்தியிருக்கிறேன் என்பதுதான்!

பத்திரிகைகளும் இரண்டு திரைப்பட விழாக் களும் 'தாகத்'தை மிக பாராட்ட, உற்சாகமாயிருந் தது. ஆனாலும் திரைப்பட விழாக்களுக்குப் படம் அனுப்பி 'சம்பாதிக்க'த் தெரியவில்லை எனக்கு என்பதுதான் வருத்தம்!

''தொடர்ந்து 'இவர்கள் வித்தியாசமான வர்கள்' படத்தில் மௌலியை டைரக்டராக அறி முகப்படுத்தினேன். அதே மௌலியை வைத்து அடுத்து 'ஒரு வாரிசு உருவாகிறது' எடுத்தேன்.

அந்தப் படத்தில் ஒரு சிறப்பு எம்.ஜி.ஆர்., சிவாஜி தவிர அன்று அத்தனை பிரபல நடிகர்களை யும் அதில் நடிக்க வைத்தேன்!

''திறமைவாய்ந்த பல இளை ஞர்களைத் தூக்கிவிட எனக்கு சந் தர்ப்பம் கிடைத்தது மகிழ்ச்சியான விஷயம்!

ஓர் இளைஞர், என்னிடம் உதவி இயக்குநராகச் சேர வாய்ப்பு கேட்டு வந்திருந்தார். அது, 'தாகம்' எடுத்துக் கொண் டிருந்த சமயம். அவர் பேசிய விதமும் காட் டிய ஆர்வமும் 'இவருக்குப் பிரமாத எதிர் காலம் உண்டு' என்று என்னை எண்ண வைத்து, சேர்த்துக் கொண்டேன். அவர்தான் பாரதிராஜா!

''அதன்பின் ஆங்கில - தெலுங்குப் பட விநியோகத்தில் கொஞ்ச நாள் இருந் தேன். 'சங்கராபரணம்' படத்துக்கு இங்கே நான் டிஸ்ட்ரிப்யூட்டராக இருந்தது எனக்கு மகிழ்ச்சியான விஷயம்.

பிறகு 92-ல் 'மாமியார் வீடு' என் றொரு படம் எடுத்தேன். ஒரு சிறைக் கைதி, விடுதலைக்குப் பின் சந்திக்கும் பிரச்னைகளை அதில் சொன்னேன்.

''எனது அடங்காத ஆசை ஒன்று - தி. ஜானகிராமனின் 'அம்மா வந்தாள்' நாவலை கமல் நடிக்க எடுக்க வேண்டும் என்பது!

கமலிடம் இதுபற்றிப் பேசப் போன போது, அவர் சட்டை இல்லாமல் மேக்கப் போட்டுக் கொண்டிருந்தார்.

''என்ன ஜானகிராமன்! என் உடம் பைப் பாருங்கள். உடற்பயிற்சி செய்து 'வஸ்தாத்' மாதிரி வைத்திருக்கிறேன். நான் எப்படி அந்த 'அப்பு' கேரக் டரில் நடிப்பது?'' என்று கேட்டார். எனக்கும் அது சரி என்று படவே, அந்த ப்ராஜக்டை விடுத்து, 'மோக முள்' ஆரம்பித்துவிட்டேன்.

அப்புறம் நடந்ததுதான் உங்களுக்குத் தெரியுமே?''



• ஜானகிராமன்

பேட்டி : **கௌதம்**

● கோ. சதாசிவம், நெல்லை.

? தமிழகத்தின் வழி காட்டி நடராஜனாமே?

! யார்? இல்லை நடராஜனைத்தானே சொல்கிறீர்கள்?

● எஸ். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

? பரீட்சையில் அதிக மதிப்பெண்கள் பெற்ற மாணவர்களுக்கான பாராட்டு விழாவில், கருணாநிதி என்ற பெயர் கொண்ட மாணவன் முதல்வர் காலில் விழுந்து ஆசி பெற்ற போது கூட்டத்தினர் சிரித்தார்களாமே? அவர்கள் சிரித்து அவமானப்படுத்தியது கலைஞரையா? அம் மாணவரையா?

! தங்களைத் தாங்களே அவமானப்படுத்திக் கொண்டார்கள்!

● சி. ராஜேந்திரன், சின்னசேலம்.

? "காங்கிரஸ் என்பது தாம்பூலம் போன்றது. அதனுடன் ஏலக்காய், கிராம்பு போன்ற நறுமணப் பொருட்கள் சேர்த்துக் கொள்வது போல் மற்ற கட்சிகளைக் கூட்டு சேர்த்துக் கொள்ளத் தயார்" என குமரி அனந்தன் கூறுகிறாரே?

! ஒவ்வொரு முறையும் தாம்பூலம் நம்பர் பீடாவாக மாறி விடுகிறதே! அதுதான் கவலை அளிக்கிறது.

● எஸ். குமார், காரைக்குடி - 2.

? ராஜன் பிள்ளை மரணம் குறித்து...?

! எப்பேற்பட்ட குற்றவாளிகளுக்கும் உரிமைகள் இருக்கின்றன. அவற்றைப் பாதுகாக்க வேண்டியது அரசின் கடமை. ராஜன் பிள்ளை விஷயத்தில் நீதித் துறை, காவல் துறை, மருத்துவத் துறை - மூன்றிலுமே தவறுகள் நிகழ்ந்துள்ளன.

● மு. கருணாநிதி, திருச்சி - 15.

? "அ.தி.மு.க. ஆட்சி பொலிவோடு உள்ளது" என்று எந்த அர்த்தத்தில் நெடுஞ்செழியன் கூறியிருக்கிறார்?

! 'சக்தி'யின் ஆபரணங்களைப் பார்த்து...?

● அ. கருமார், காட்டுக்காணூர்.

? கோவில்களில் தி.மு.க. செய்த பாவங்களுக்குப் பரிகாரமாகத்தான் இப்போது அ.தி.மு.க. அரசு கும்பாபிஷேகங்கள் நடத்துகிறது என்று அமைச்சர் நடேசன் பால்ராஜ் கூறியுள்ளாரே?

## 'ஜெ.'க்குப் பிறகு ஹெலிகாப்டர் யாருக்குச் சொந்தம்?

! அப்படியானால் அடுத்து வருகிற ஆட்சியாளர்கள் இன்னும் எக்கச்சக்கமான கும்பாபிஷேகங்களைச் செய்ய வேண்டியிருக்கும் போலிருக்கிறதே!

● ஜெ. கண்ணன், சென்னை - 101.

? "'நிலாவைப் பிடித்துத் தா' என்று தாயிடம் கேட்டு அடம்பிடிக்கும் அசட்டுக் குழந்தையைப் போல, 'பிரபாகரனைப் பிடித்துத் தா' என்று இந்தியா இலங்கையிடம் கேட்கிறது..." என முன்னாள் அமைச்சர் ஜி. விசுவநாதன் பேசியிருக்கிறாரே?

! பிரபாகரன் நிலாவும் இல்லை; இந்தியா அதை விளையாடக் கேட்கும் குழந்தையும் இல்லை. முன்னாள் இந்தியப் பிரதமரின் கொலை வழக்கில் பிரதம குற்றவாளி எனக் குற்றம்சாட்டப்பட்டவர் பிரபாகரன். எனவே விஷயம் ரொம்ப சீரியஸ் ஆனது. தனித் தமிழ் ஈழமும் இவர்கள் கேட்கின்ற மாநில சுயாட்சியும்தான் 'தண்ணீருக்குள் தெரியும் நிலாவின் பிம்பத்தைப் பிடித்துத் தா' என்று கேட்பதற்குச் சமமானது.

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? 'இலவச திட்டங்



ஞாநி ·டாப்

களுக்குத் தமிழகத்துக்கு மேல் எந்த மாநிலமும் வாரி வழங்கவில்லை' என்று நிதி அமைச்சர் நெடுஞ்செழியன் கூறியுள்ளாரே?

! அந்தத் திட்டங்களை இவ்வளவு மோசமான விதத்தில் அமுல்படுத்தி, ஏரான லஞ்ச ஊழலுக்கு வழிவகுத்திருப்பதையும் வேறெந்த மாநிலத்திலும் பார்க்க முடியாது.




● என். பாலகிருஷ்ணன், வளவனூர்.

? "ஒரு லட்சிய வாழ்க்கையைப் புரட்சித் தலைவியின் தலைமையில் நடத்தி வருகிறோம்" என அமைச்சர் மதுசூதனன் கூறியிருக்கிறார். அப்படியென்றால் என்னவென்று எனக்குப் புரியவில்லை... உங்களுக்குப் புரிகிறதா?

! என்ன சார், புரியலையா? அர்த்தம் கொள்ளை கொள்ளையாக இருக்கிறதே!

● பி. ராஜசேகரன், மதுரை.

? இளம் பெண்ணைக் கொலை செய்து ஓட்டல் அடுப்பில் எரித்தவரான இளைஞர் காங்கிரஸின் முன்னாள் பொதுச் செயலாளர் சுசில் சர்மாவின் கொடூரச் செயல் பற்றி...?

! தமிழக போலீஸ் செய்யத் தவறியதை கர்நாடகா போலீஸ் செய்து விட்டது. தலைமறைவாய் இருந்தவரைக் கண்டு பிடித்து டெல்லி போலீஸிடம் ஒப்படைத்து விட்டது. நடந்துள்ளது மிகக் கொடூரமான செயல். ஆனால் அதனினும் கொடூரம் என்னவென்றால், இத்தகைய காரியங்களில் ஈடுபடுவோர் இன்று அரசியலில் பொறுப்பான பதவிகளை வகிக்க முடிகிறது என்பதுதான்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம். ❑

? ஊழல் செய்து பலநூறு கோடிகள் சேர்த்த அரசியல்வாதிகள் அசைக்க முடியாத சக்தியுடன் உலாவர, பதினைந்தாயிரம் ரூபாய் லஞ்சம் வாங்கிய நீதிபதி டிஸ்மிஸ் செய்யப்பட்டதில் பெருமையோ மகிழ்ச்சியோ அடைய முடியவில்லையே?

! பலநூறு அரசியல்வாதிகள் கோடிக்கணக்கில் ஊழல் செய்வதற்கும் ஒரே ஒரு நீதிபதி சில ஆயிரங்கள் லஞ்சம் வாங்குவதற்கும் இடையில் வித்தியாசமில்லை. இந்த விஷயத்தில் தமது அதிகாரங்களை உணர்ந்து, முதுகெலும்போடு செயல்பட்டுள்ள ஆளுனர் பாராட்டுக்குரியவர்.

● எஸ். அம்பிகானந்தன், வண்டலூர்.

? காஷ்மீருக்குச் சென்ற வெளிநாட்டினரைக் கடத்திச் சென்றது பாக். கூலிப் படையினர் என்று ராவ் குற்றம் சாட்டுகிறாரே...?

! அப்படியிருந்தாலும் அவர்களை விடுவிக்க வேண்டிய பொறுப்பு நம்முடையதாகிறது. ஆனால் இப்படி அயல்நாட்டுப் பயணிகளைக் கடத்திச் செல்வதன் மூலம் பாகிஸ்தான், உலக நாடுகளின் ஆதரவையும் அனுதாபத்தையும் இழந்து விடும். இதை உணராமல் அவர்கள் செயல்படுவது ஆச்சரியம்.

● வெ. சாந்தா, மன்னார்குடி.

? இருபது கோடி ரூபாய் ஹெலிகாப்டர் ஜெயலலிதாவுக்குப் பின் யாருக்குச் சொந்தம்?

! சரியாப் போச்சு! சு. சுவாமி கொடுத்திருக்கிற ஜெயின் சொத்துப் பட்டியலில் ஹெலிகாப்டரையும் சேர்த்துட்டீங்களே! அது மக்களின் வரிப்பணத்தில் வாங்கப்பட்டது; மக்கள் சொத்து!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எம். சம்பத்,
9, மாரியம்மன் கோயில் தெரு,
வேலாயுதம்பாளையம் - 639 117.

# சேகர்ராஜன் பைனான்ஸ்

(சேகர்ராஜன் பைனான்ஸ் லிமிடெட்டின் ஓர் அங்கம்) 5325261, 5325265

பதிவு : 79, குளை நெடுஞ்சாலை, குளை P.O. எதிரில், சென்னை - 112. போன் : 5324912, 5325447

24% மாத வட்டி

## குறள் டெப்பாசிட்

**24%** வட்டியில் பின் தேதியிட்ட காசோலைகள் மொத்த மாதத்திற்கும் தரப்படும்

ரு. 1000/- செலுத்தி 252 மாதங்களுக்குப் பிறகு ரு. 1,28,000 பெறுவீர்.

## குறிஞ்சி டெப்பாசிட்

வைப்புநிதி 3 வருடத்தில் இரட்டிப்பாக பெறும் வசதி

தலைமை அலுவலகம் மாறுவதை முன்னிட்டு அதிக ஊக்கத் தொகை பெறுவீர்.

3 வருடத்தில் இரட்டிப்பு

**கிளைகள் :**

94/4, S.N. ஹைரோடு, சேனைத்தலைவர் வளாகம், திருநெல்வேலி டவுன், போன் : 322382

3, வழுதாவூர் மெயின் பாரதி சேஷமஹால் அருகில், பாண்டிச்சேரி,

3, "ASB" வளாகம், 60, வடக்கு நாகேஸ்வரன் தெரு, கும்பகோணம்.

23-C, கிருஷ்ணா வளாகம், E.R. ஸ்கூல் எதிரில், திருச்சி - 2.

56/108, ராஜன் வளாகம், தமிழ்ச்சங்கம் ரோடு, மதுரை - 1.

A-1, பாரதி தெரு, ஸ்வர்ணபுரி, சேலம் - 4.

(100% நிதியில் புதிய பங்குகள்)

செயல்பாடுகள் : ஷேர், வாகனம், LIC நிதி உதவி மற்றும் டெப்பாசிட்

— KOMALA ADS

## புகழ்பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம. பத்மனாபன்.



எனது தந்தையார் அடியேனுக்கு மந்திரோபதேசம் செய்யும் காட்சி

பிரபல ஜோதிஷர் (பண்டித காழியூர் பத்மநாபன்) காழியூர் ஸ்ரீனிவாசாச்சாரியாரின் மூத்த புதல்வரும், ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசிர்வாதமும், பெற்றவரால் மகத்தான சக்தி வாய்ந்த யந்திரங்கள், சக்கரங்கள் வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன. மகாலெஷ்மி கவசம் 200/- மகா சுதர்சன யந்திரம் ரு 200/- லஷ்மி நரசிம்ம கவசம் ரு 300/-தனாகர்ஷண யந்திரம் ரு 300/- மகா சுதர்சன சக்கரம் ரு 500/- மஹாலக்ஷ்மி சக்ரம் ரு 500/- இவை தவிர அநேக விதமான யந்திரங்களும், கவசங்களும், (விசேஷ பூஜா க்ரமப்படிக்கு) தயாரித்து அனுப்பப்படும். வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை DD மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு ரு 50/-

கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழ் / ஆங்கிலம் ரு 40/- ஜாதகத்தின் பொதுப்பலன்களை நேரில் சொல்வதற்கு ரு 50/- ஆயுள் பலன்(வருஷம், மாதம், தேதி, நேரம், வார) ரு 200/-

மூன்று கேள்விகளுக்கு ரு 25/- வேண்டுவோர் கடிதத் தொடர்பு கொண்டு விபரம் அறிந்து பணம் அனுப்பி நல்ல நன்மைகளும் அடைவீர்களாக. நேரில் - காலை 8 to 12 noon

பிரபல ஜோதிஷர் பண்டித காழியூர் பத்மநாபன்,
"தபோநிதி"
நெ. 5, வித்யோதயா முதல் மெயின் தெரு,
தபெ எண் : 1411, திநகர், மதராஸ் 600 017. Ph. 826 3814
தென்இந்தியா (கிளைகள் ஏதும் கிடையாது)

**முக்கிய கவனிப்பு** : முன் பதிவு செய்து கொள்வது அவசியம் தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் மிகவும் கண்டிப்பாக பரம இரகசியமாக வைக்கப்படுகின்றன. வீட்டில் கிரகதோஷம் மற்றும் எந்த விதமான தோஷங்களும் பாதிக்காமலிருப்பதற்கு, சுதர்சன ஹோமம், மகா சுதர்சன சக்ரம் பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே செய்யப்படும். நேரிலோ தபால் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.

Komala Ads

# குடமுழுக்கு சீசன்!


• மீனாட்சி கோயில் கும்பாபிஷேகம்

**மன்னார்குடி, மதுரை, அழகர்கோயில், திருச்செந்தூர் என்று வரிசையாகப் பல கோயில்களில் கும்பாபிஷேகங்கள் நடைபெற்று வருகின்றன 'கும்பாபிஷேகம் என்றால் என்ன?' என நாம் தெரிந்து கொள்ள இது நல்ல சீசன்.**

'மஹா' என்ற சொல் உயர்வைக் குறிப்பிடுகிறது. 'கும்பம்' என்றால் குடம். 'அபிஷேகம்' என்றால் மந்திரங்கள் ஒலிக்க, தெய்வ வடிவங்களின் மீது, தூய நீரை பக்தியுடன் ஊற்றுவதாகும்.

ஒருவிதத்தில் பார்க்கப் போனால் கும்பாபிஷேகம் செய்யப்படுவது என்பது தான் 'ஒரு கட்டடத்தையும் சிலைகளையும் விக்கிரகங்களையும்' ஆலயமாக மாற்றுகிறது எனலாம். ஆகமங்களில் கூறப்பட்டுள்ளபடி, மந்திரபூர்வமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் மூர்த்திகளில் கடவுளே எழுந்தருளி ஜீவராசிகளுக்கு அருள்புரியும் இடமே கோயிலாகும். அப்படி எழுந்தருள கும்பாபிஷேகம் அவசியம்.

கும்பாபிஷேகம் என்று பொதுவாகக் குறிப்பிட்டாலும், அதில் நான்கு வகைகள் உண்டு. ஒரு இடத்தில் புதிதாக ஆலயம் அமைத்து, அங்கு பிரதிஷ்டை செய்யப்படும் மூர்த்திகளுக்குக் கும்பாபிஷேகம் செய்வதை 'அனாவர்த்தம்' என்று குறிப்பிடுவார்கள். ஆலயத்தின் கர்ப்பகிருகம், விமானம், பிரகாரம், கோபுரம் ஆகியவற்றில் பழுது ஏற்பட்டால், அவற்றைப் புதுப்பித்து, மூர்த்திகளின் வடிவங்களுக்குக் கீழே அஷ்ட பந்தனத்தை சாத்தி, திரும்பவும் மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்வதைப் 'புனராவர்த்தம்' என்பது வழக்கம். கோயிலுக்குள் மரபு அல்லது ஆசாரப்படி நடக்கக் கூடாதது நடந்து விட்டால், அந்தத் தீட்டு விலகும் வகையில் செய்யும் கும்பாபிஷேகத்தின் பெயர் 'அந்தரிதம்'.

வைணவர்கள் கும்பாபிஷேகத்தை 'மஹா சம்ப்ரோக்ஷணம்' என்றும், பொதுமக்களில் ஒரு பகுதியினர் 'குடமுழுக்கு' என்றும் குறிப்பிடுவது நடைமுறை.

கட்டி முடித்ததுமே கும்பாபிஷேகம் செய்யப்பட்ட கோயிலுக்கு மீண்டும் மீண்டும் ஏன் கும்பாபிஷேகம் செய்கிறார்கள்?

கோயில்கள் தொடர்ந்து தூய்மையாகவும் பக்தியுடனும் பராமரிக்கப்படுவதற்கு இந்தச் சடங்கு அவசியமெனக் கருதப்படுகிறது. ஆராதனைகளில் ஏதாவது குறைகள் தொடர்ந்து இருக்குமானால் கோயிலின் தெய்விகம் குறைந்து விடுமென்றும், குறிப்பிட்ட இடைவெளிகளில் செய்யப்படும் கும்பாபிஷேகத்தில், அந்தக் குறையைப் போக்கி, இறைவனைத் தொடர்ந்து கோயிலில் எழுந்தருளச் செய்யும் என்பதும் நம்பிக்கை. கோயிலைத் தூய்மைப்படுத்தும் போதே உள்ளத்தையும் சுத்தமாக்குகிறோம்.

கும்பாபிஷேகம் என்பது வெறுமனே குடத்திலுள்ள நீரால் அபிஷேகம் செய்வது மட்டுமல்ல. அன்று பலவித சடங்குகள் உண்டு. தடைகளைப் போக்க வேண்டி செய்யப்படும் "விநாயக பூஜை" இறவாத வரம் வாங்கிய வாஸ்துபுருஷன் என்ற அசுரனின் தொந்தரவு இல்லாமலிருக்க செய்யப்படும் "வாஸ்துசாந்தி", ஆலயத்துக்காக மண்ணை வெட்டி எடுத்ததால் அல்லது எடுக்க வேண்டியிருப்பதால், பூமி மற்றும் பிரம்மன் ஆகியோரின் உத்தரவைக் கேட்கும் "மிருத்ஸங்கிரஹணம்", பாலிகைகளில் பால் கலந்த தானியங்களை மந்திரபூர்வமாகத் தெளித்து முளைக்கச் செய்யும் "அங்குரார்ப்பணம்" ஆகியவையும் கும்பாபிஷேக விசேஷத்தின் போது செய்யப்படும். அங்குரார்ப்பணம் முடிந்த சில நாட்களில் தானியங்கள் சீராக, செழுமையாக முளைத்தால் கும்பாபிஷேகம் செவ்வனே நடைபெற்றதாகக் கருதுவார்கள். அப்படி முளைக்கவில்லையென்றால் பிராயச்சித்தங்கள் செய்வது மரபு.

**— ஜி.எஸ்.எஸ்.**

படம் நன்றி : **தினமலர்**



சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சிரிப்பு, சிணுங்கல், சோகம், வீரம் மற்றுமுள்ள அனைத்து ரசங்களுக்கும் அன்னாரால் எப்படி ஒரே வித பாவம் காட்ட முடிகிறது என்பது ஆழ்ந்த யோசனைக்குரிய விஷயம் என்று அருகிலிருந்த இருக்கையில் அமர்ந்திருந்தவர் கருத்து தெரிவித்ததை ஒரு சாரார் ஏற்றுக் கொள்வர். ஒரு சாரார் ஏற்க மறுப்பர். ஆயினும் திரையில் அந்தப் பெண்மணி தோன்றும்போதெல்லாம் ஒருவித குளுமை சூழ்வதை யாரும் மறுக்க மாட்டார்கள் என்றே கருதுகிறேன்.

அடுத்தபடியாக, லாஜிக் என்று சொல்லப்படுகிற மிகப் புராதனமான திரைச் சொல்லுக்கான இலக்கணப்படி ஒரு காட்சியும் படத்தில் இடம்பெறாதது வருந்துதற்குரிய விஷயம் என்று ஒரு அன்பர் குறிப்பிட்டார். இதை முற்றிலும் மறுத்து விடுவதற்கில்லை.

# மருமகன்

(ஒரு மாறுதலுக்கு இவ்வாரம் TV எதிரொலி நல்லதம்பி விமர்சிக்கிறார் - நமது கற்பனையில்.)

அன்பர்களே, மருமகன் என்ற படத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லச் சொல்லியிருக்கிறார்கள். முதலில் அதற்கு நன்றியை தெரிவித்துக் கொள்ளுவோம்.

கொடிய வில்லன் ஒருவனுக்கு அழகிய பெண் இருந்தால், கதாநாயக நடிகர்தான் மருமகனாகப் போகிறவர் என்பது எல்லோருக்கும் தெரிந்திருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. அன்னார், எப்படி முயற்சித்து, என்னென்ன சாதனைகள் செய்து, எம் மாதிரியான போராட்டங்களைக் கடந்து மருமகனாகிறார் என்பதில்தான் இயக்குநரின் சாமர்த்தியம் பளிச்சிட வேண்டியிருக்கும்.

அது பளிச்சிட்டிருக்கிறதா என்று கேட்பீர்களானால், ஆமாம் என்று சொல்ல முடியவில்லை என்று சொல்லாவிட்டாலும், இல்லை என்றும் கூறி விட முடியாதாகையால் சில இடங்களில் ஆமாம் என்றும், பல இடங்களில் இல்லை என்றும் கூறினால் தவறேதும் உள்ளதாகக் கருத மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

பம்பாயிலிருந்து மெனக்கெட்டு டெய்லரிங் என்று சொல்லப்படுகிற, தையற்கலை என்கிற அறுபத்து நான்கு கலைகளில் ஒன்றைப் பயின்று வருகிற கதாநாயகனாகப்பட்டவர், ஒரு சிறிய கிராமத்தில் கடை தொடங்குவதில் தேசிய ஒருமைப்பாடு இருப்பதை நாம் ஒப்புக் கொண்டால், இப்படத்தை தேசிய நோக்கிலும் அணுக ஒரு வாய்ப்பு கிடைக்கிறது. இடமின்மை காரணமாக அது எப்படி என்பதை இன்னொரு சமயம் விரிவாகப் பார்க்க முடியும் என்று நம்புவோம்.

இவ்விடத்தில் கதாநாயகி மீனா பற்றிச்

அப்படித்தான் பாருங்கள், பட்டப் பகலில் வில்லனால் கார் ஏற்றி வீழ்த்தப்பட்ட கதாநாயகனின் தாயான மனோரமா பண்பட்ட நடிகை - நடுராத்திரி மகன் வரும் வரை அப்படியே கிடப்பதும் மகன் மழையில் வந்ததும் சில திடுக்கிடும் விஷயங்கள் சொல்லி விட்டு இறப்பதும் - லாஜிக் அற்ற இடமெனக் கொள்ளாமல் ஏன் ஒரு நல்ல நகைச்சுவைக் காட்சி எனக் கொள்ளக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

இயக்குநர், பல படங்கள் இயக்கிப் பண்பட்டவர் என்று முன் வரலாறு சொல்லுவதாகச் சொன்னார்களெனினும், அலுப்பு என்று சொல்ல முடியாவிட்டாலும் ஒருவித களைப்பு, சலிப்பு, களிப்பு ஏற்படுத்துகிற திரைக்கதையைக் கையாண்டிருப்பதைத் தவிர்த்திருக்கலாம் என்று ஒரு அன்பர் குறிப்பிட்டதை இச்சமயம் நினைவு கூர்ந்தால் பொருத்தமாக இருக்கும் என்று சொல்லி, இந்த அளவில் நிறுத்திக் கொள்கிறேன்.

— ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

உங்களுடைய முதலீடு பாதுகாப்புடன்
பன்மடங்கு பெருகிட ...

# திருமகள்

வழங்கும்

# 25% + 5%

வட்டி ஊக்கத் தொகை

உங்கள் முதலீடு
**36** மாதங்களில்
இரு மடங்காகிறது

வட்டிக்கும், முதலீட்டை திரும்ப பெறவும்
முதலீடு செய்யும் போதே பின் தேதியிட்ட
காசோலைகள் வழங்கப்படுகின்றது.

மிகவும் கவர்ச்சிகரமான
**10** டெபாசிட்
திட்டங்கள்



**THIRUMAGAL LEASING & HIRE PURCHASE CORPORATION**

**H.O;** D-1, Hongkong Complex, 9, Ramanathan Street,
T. Nagar, Madras - 600 017. Ph : 434 74 08
Branch : 194, V.V.P. Building, Anna Salai, Thiruvarur, Ph : 22906.

நிலையான பாதுகாப்பு... நிறைவான வருமானம்...

வேலை நேரம் : 10.00 A.M. To 6.30 P.M. ஞாயிறு : 10.00 A.M. to 1.00 P.M.

Springhead

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka